உ
குருபாதம

# ஞானசம்பந்தம்

மலர் 31 | பரிதாபி – ஆடி – 10 – 8—72 | இதழ் 9

திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினுய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே — சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்



## கயிலைக் காட்சி

நிலவுலகில் பிறந்து வாழுங் காலத்தில் நன்னெறியில் நின்று மறைந்த நன்மக்களை, 'கயிலாயம்' சென்றுர், என்று கூறுவதும், 'சிவலோக பதவி அடைந்தார்' என்று கூறுவதும் மரபு. இதன் பொருள் என்ன? 'முத்திபெற்றுர்' என்பதே. இதனுல், 'கயிலாயம்' அல்லது 'சிவலோகம்' என்பது 'முத்தித் தானம்' என்பது விளங்குதலோடு, முத்தித் தானம் அந்த இரு பெயர்களையும் (கயிலாயம், சிவலோகம் என்ற பெயர்களை) உடையது என்பதும் விளங்குகின்றது. அவ்வாருயின், நமது பாரதநாட்டின் வட எல்லையாகிய இமய மலையின் ஒருபகுதி 'கயிலாயம்' என்று சொல்லப்படுகிறதே; அதுதான் சிவலோகமோ? அப்படியானுல், சிவலோகம் இந்தப் பூலோகத்தின் ஒருபகுதியோ என்று எண்ணத் தோன்றும்; அவ்வாறில்லை.

உயிர்களின்பொருட்டு அமைந்த உடம்பும், உலகமும் 'தூலம் சூக்குமம்' என இருவகையில் உள்ளன. நம் கண்ணுக்குக் காணப்படுகின்ற உடம்புகள் தூலம். இவை மட்டுமன்றிக் கண்ணுக்குக் காணப்படாத உடம்பும் உயிர்களுக்கு உள்ளன; அவைகள் சூக்குமம்; இதை இக்காலத்தில் 'மனஉடம்பு' என்கின்றூர்கள். 'புரியட்ட காயம்' எனப்படுவதும் இதுவே.

உயிர்களுக்கு வேண்டும் உதவியின்பொருட்டு, 'தூல தேகம், சூக்குமதேகம்' என்னும் இருவகை உடம்புகளைக் கொடுத்த இறைவன், அவை தங்குதற்கு இடமான உலகத்தையும் அவ்வாறு, 'தூல உலகம், சூக்கும உலகம்' என இருவகையாகத் தந்துள்ளான். அவைகளில் தூல உலகத்தையே நாம் காண்கின்ரும். பூமிமட்டுமன்று: சந்திரன், செவ்வாய், குரு, சுக்கிரன் முதலியனவாக நாம் தொலைவில் காண்கின்ற கோளங்களும் தூல உலகங்களே. 'மண்ணுலகம்' என்பது நாம் வாழும் நிலவுலகம் மட்டும்அன்று; மேற்கூறிய கோளங்கள் பலவும் மண்ணுலகமே. அதனல் அவை அனைத்தையும் தொகுத்து, 'பிருதிவி யண்டம்' என்று சிவாகமங்கள் கூறுகின்றன.

இவை அனைத்திற்கும் வேருய், இவ்வூனக் கண்ணல் நேராகவோ, எவையேனும் சில நுண் கருவிகள் வழியாகவோ காண முடியாதனவாய் உள்ளன சூக்கும உலகங்கள். அவைகள் பெரும்பான்மையும் 'சுவர்க்கம், நரகம்' என இரண்டாக வகுத்துக் கூறப்படுகின்றன. இன்பத்தையே தருவது சுவர்க்கம் துன்பத்தையே தருவது நரகம். இன்பம் உயர்ந்ததாகலின், சுவர்க்கம் 'மேலுலகம்' என்றும் துன்பம் இழிந்ததாகலின் நரகம் 'கீழுலகம்' என்றும் சொல்லப்படுகின்றன. சில தன்மைகளை ஒட்டி இரண்டும் ஏழ் ஏழாகப் பிரித்துக் கூறப்படுகின்றன. அவற்றுள் கீழ் ஏழுலகங்கள், 'ஆடகேசுர லோகம், இராக்கத லோகம், நாக லோகம், அசுர லோகம், கூஷ்மாண்ட லோகம், நரக லோகம், காலாக்கினி ருத்ர லோகம்' என்பன. மேல் ஏழ் உலகங்கள், 'தேவர் உலகம், முனிவர் உலகம், பிதிரர் உலகம்' ஞானியர் உலகம், பிரம லோகம், விட்டுணு லோகம், உருத்திர லோகம்' என்பன. இந்த ஏழுலகங்களுக்கும் அப்பால்உள்ளதே சிவலோகம். உருத்திர லோகத்தையும் சில வேளைகளில், 'சிவ லோகம்' என்றும், சிவ லோகத்தையும் சில இடங்களில், 'உருத்திர லோகம்' என்றும் கூறுவர். அவ்விடங்களில் அவற்றை இன்னதென உணர்ந்து கொள்ளல் வேண்டும்; சிவ லோகமே 'மகா கயிலாயம்' எனப்படுவது. ஆகவே முத்தி பெற்றவர்களை, 'கயிலாயம் அடைந்தார்' எனக் கூறுதற்கு, மகா கயிலாயமாகிய இந்தச் சிவ லோகத்தை அடைந்தார்' என்பதே பொருள்.

வரகுணனுக்குச் சிவலோகங் காட்டிய திருவிளையாடலைப் பற்றிக் கூறுமிடத்தில் பரஞ்சோதி முனிவர்,

"நெடியவன் பிரமன் தேட
நீண்டவன், தென்னற்கு ஏழின்
முடியதாம் சிவலோ கத்தைக்
காட்டிய முறை யீது"

என்று சிவலோகத்தை மேல் ஏழுலகங்கட்கு அப்பால் உள்ளதாகக் கூறியிருத்தல் இங்கு நினைவுகூரத்தக்கது.

இந்த மகாகயிலாயம் நமது வாக்கு மனங்கட்கு அதீதமானது. (அப்பாற்பட்டது) இதனை இம் மக்களுடம்பு மட்டுமன்று; இந்திரன், அயன், மால், உருத்திரன் எனத் தோன்றும் தெய்வ உடம்புகள் கொண்டும் அடைதல் இயலாது. ஆகவே, வாக்கு மனங்களைக் கடந்தவனும் இங்கு வீற்றிருக்கின்ற சிவபெருமான், வாக்கு மனங்களைக் கொண்டன்றி ஒன்றையும் அறியவோ, அடையவோ இயலாத உயிர்களின் பொருட்டு அவைகள் வாழும் உலகத்தில் வாக்கு மனங்கட்கு எட்டக்கூடிய வடிவங்களைக் கொண்டு எழுந்தருளியிருந்து, அவ்வுயிர்கள் செய்யும் வழிபாடுகளை ஏற்று அருள் புரிகின்றான். அதனால் அவ்வாறு அவன் எழுந்தருளி அருள் வழங்கும் தூய இடங்களும் சிவலோகம் அல்லது கயிலாயமேயாம். அவ்விடங்களில் இருந்து சண்டேசுர நாயனார்போல இவ்வுலக வாசனை யற்று வழிபடுவோரும் சிவலோகம் அல்லது கயிலாயத்தில் இருப்பவரே யல்லது, இவ்வுலகத்தில் இருப்பவர் அல்லர்.

இவ்வாறு இறைவன் உயிர்களின் பொருட்டு எழுந்தருளி வருதற்கு இடமும் தகுதி பெற்றிருத்தல் இன்றியமையாதது.

"காடும், காவும், கவின்பெறு துருத்தியும்,
யாறும், குளனும், வேறுபல் வைப்பும்"

என முருகாற்றுப் படையுட் கூறியதுபோல, நதிக்கரை, மலையுச்சி' பூஞ்சோலை, மரச்செறிவு முதலியவை இயல்பாக இறைவன் எழுந்தருளி யிருத்தற்குத் தகுதி பெற்றுவிடுகின்றன. அதனால், அந்த இடங்கள் தவத்திற்கும் மிக ஏற்றனவாகிவிடுகின்றன. அத்தகைய புனித இடங்களுள் இயல்பாகவே தலைமை பெற்று விளங்குவது இமயமலை. அதனால் தவத்தோர்க்கு மிகச் சிறந்த இடமாய் இது விளங்குகின்றது. தவத்தவர் இறைவன் திருவுருக் காட்சியை நேரே கண்டு வணங்குவது, பிற இடங்களிற்போல ஓரோர் காலத்தில் அரிதில் நிகழ்வதுபோல் இல்லாமல், இங்கு அவ்வப்பொழுது எளிதில் நிகழ்வதாகும்.

இமயமலையை உயரத்தில் மூன்று பகுதியாகப் பிரித்தால் 'கீழ்ப் பகுதி முழுவதிலும் சித்தர் வித்தியாதரர் முதலிய தேவர் பலரும் வாழ்கின்றனர்' என்றும், 'நடுப்பகுதியில் எட்டுத்திக்குப் பாலகர்களுக்கும் அவரவருக்கு உரிய திசையில் நகரங்கள் உள்ளன; அவற்றில் அவர்கள் வாழ்கின்றனர்' என்றும், மேற் பகுதியில் உள்ள மூன்று கொடுமுடிகளில் மேற்கில் உள்ளதில் திருமாலுக்கும், நடுவில் உள்ளதில் பிரமனுக்கும், வடகிழக்கில் உள்ளதில் சீகண்ட பரமசிவனுக்கும் உரிய இடங்கள் உள்ளன; சீகண்ட பரமசிவன் எழுந்தருளியிருக்கும் இடமே வெள்ளியங் கிரியாகிய 'ஸ்ரீ கைலாசம்' என்றும் சிவாகமங்கள் கூறுகின்றன. எனவே, இமய மலையின் பகுதியில் உள்ள வெள்ளிமலையாகிய கயிலாயம்,மேலே குறிப்பிட்ட மகாகயிலாயமாகிய சிவலோ கத்தின் பிரதியாக விளங்கும் பூலோககயிலாயமாகும். இங்ஙன மாகவே, நிலவுலகத்தார் நலத்தின் பொருட்டு வாழும் நந்தி பெருமான் முதலிய அகச்சந்தானாச்சாரியர்களும், சனகாதி முனிவர்களும், சிவகணங்களும்போல்பவர் இருப்பதும், அவர்கள் சிவபெருமானை அவரது இயற்கை வடிவில் பலமுறையும் எளி தாகக் கண்டு வணங்கி அருள் பெறுவதும், அருள்பெற்ற அவர்கள் திருமூலர் போன்ற சிவயோக சித்தர்களுக்கும், மற்றும் பரதகண்டம் முழுவதிலும் உள்ள பக்குவிகளுக்கும் காட்சி தந்து அருள்புரிவதும் போல்வன எல்லாம் வெள்ளியங் கிரியாகிய கயிலாயத்திலிருந்தே என்பது தெளிவாகும்.

'நிலவுலகத்தில் பசு புண்ணியத்தைச் செய்தவர்கள் சுவர்க் கம் அடையுங்கால், இடையில் யமதருமனைக் கண்டு அவனது ஆணைபெற்ற பின்னரே சுவர்க்கத்தை அடைவர்' என்பது வேதாகமங்களின் துணிபு. அவ்வாறே 'நிலவுலகில் நின்று சிவ புண்ணியம் செய்தவர் சிவபோகத்தை அடையுங்கால், ஸ்ரீ கைலாசபதியாகிய ஸ்ரீ கண்ட பரமேசுவரனைத் தரிசித்து அவர் அருள்பெற்ற பின்னரே சிவலோகத்தை அடைவர்' என்பதும் அந்நூல்களின் துணிபு. இறைவன் அருளிப்பாட்டின்படி திருக் கயிலாயம் செல்பவர் அங்கிருந்தே சிவலோகத்தை அடைவர். ஆகவே, சுந்தரமூர்த்தி சுவாமிகளும், சேரமான்பெருமாள் நாயனா ரும் களையா உடலோடு திருக்கயிலை சென்றார்களாயினும், இறை வன் அருளிப்பாட்டின்படி சென்றனர் ஆதலின், அவர்கள் அங்கிருந்தே சிவலோகம் எய்தினர். அப்பர்பெருமான் தாமே தமது ஆர்வத்தால் கயிலை காணச் சென்றனராதலால் அவர் மீண்டும் நிலவுலகத்திற்கு வரவேண்டியிருக்கும் என்று தானோ, என்னவோ இறைவன் அவரை இடையிலே திருப்பித் திருவை யாற்றுக்கு அனுப்பி அங்கே கயிலைக் காட்சியைக் காணச் செய் தான்!

இவ்வாற்ருல் எல்லாம், 'வட கயிலே' என்றும், 'திருநொடித் தான் மலை' என்றும் சொல்லப்படுகின்ற திருக்கயிலாய மலை, நில வுலகம் உய்தற்பொருட்டு இறைவன் எழுந்தருளியிருக்கும் தலங் கள் பலவற்றுள்ளும் தலையாயது என்பதும், அதனையே சமயா சாரியர் நால்வரும் தங்கள் திருப்பாடல்களால் போற்றினர் என் பதும், அவ்வாருகவே, பூலோக கயிலாயம் பாடல்பெற்ற தலங் கள் 274ல் ஒன்ருய் விளங்குகின்றது என்பதும் அறியத்தக்கன இப்பொழுது வெளிப்பட்ட விடைவாய்த் தலத்தைக் கூட்டப் பாடல்பெற்ற தலங்கள் 275 ஆகும். திருக்கயிலை பூவுலகத்தில் உள்ளதாயினும், மகாகயிலாயம் போலவே மக்கள் எளிதில் சென்று தரிசிக்க முடியாத நிலையில் உள்ளமை நினைத்தற்குரியது. இந்தப் பூலோக கயிலாயத்தைச் சென்று தரிசிக்க இயலாதவர் கட்குத் திருக்காளத்தி, திருச்சிராப்பள்ளி, திரிகோணமலை இவை களைச் சிறப்பாக 'தட்சிண கயிலாயம்' என்றும், மற்றும் திருவை யாறு, திருவண்ணுமலை முதலிய தலங்களையும் அத்தகையன என் றும் ஆன்ருேர் கூறியுள்ளனர். அவைகளையும் காண இயலாத வர்க்கு அங்கங்கு உள்ள சிறந்த தலங்களே கயிலாயங்களாம்.

சிவநெறி மரபின்படி திருக்கயிலைக்கு முதன் முதலாக யாத் திரை செய்தவர் காரைக்காலம்மையார். இறைவனைப் வேண்டிப் பெற்ற பேய் வடிவத்தால் அவருக்கு அஃது இயல்வதாயிற்று. புனிதத் திருமலைக்கு முதலில் சென்றவராக நாம் அறிவது புனிதவதியாரையே. எதற்கும் முதலில் வழிகாட்ட வேண்டிய வர் தாயாரேயன்ருே! அதனுல், இறைவனுலேயே 'அம்மையே' என்று அழைக்கப்பெற்ற அம்மையார்தாம் முதலில் கயிலைக்கு வழிகாட்டினர். அறம் புரிதல், சிவபூசை செய்தல் ஆகியவற்றை முதலிற்செய்து காட்டியவள் காமாட்சியம்மை.

கயிலையை அணுகும்பொழுது, இறைவன் அருள்வழித் திருவாலங்காட்டை அணுகும்பொழுதும், காரைக்காலம்மையார் காலால் மிதியாது, தலையால் நடந்து சென்றமை கருத்திற் கொள்ளத்தக்கது. 'அம்மையார் தலையால் நடந்த இடத்தை நான் காலால் மிதியேன்' என்று ஞானசம்பந்தர் திருவாலங் காட்டில் திருவடி வையாமல் பழையனூரிலே எழுந்தருளியிருந் தார். இறைவனும் அவர் இருந்த இடத்திற்கே சென்று கனவில் காட்சி வழங்கித் திருப்பதிகம் பாடுமாறு கட்டளை யிட்டருளினன் ஞானசம்பந்தர், நாவுக்கரசர் இருவருக்கும் பின்வந்த சுந்தரர், அவ்விருவரும் திருவருள் பெற்று மொழித் தொண்டும், கைத்தொண்டும் செய்த தலங்களைக் காலால் மிதிக்க அஞ்சிப் புறத்தே இருந்தார். அவருக்கும் இறைவன் அவர் இருந்த இடத்திற் சென்றே அருள் செய்தான். இப்படி உள்ளது நம் சிவநெறி மரபு

அம்மையாருக்குப் பின் கயிலை யாத்திரை செய்தவர் அப்பர். அவர்முன் இறைவன் தோன்றி,

"கயிலை மால்வரை யாவது காசினி மருங்கு
பயிலும் மானுடப் பான்மையோர் அடைவதற் கெளிதோ!
அயில்கொள் வேற்படை அமரரும் அணுகுதற் கரிதால்"

என்று அருளியது முற்றிலும் உண்மையே. எத்துணையோ எந்திர வசதிகள் உள்ள இக்காலத்திலேயே கூடவில்லை யென்ருல், இவைகளுள் ஒன்றும் இல்லாத அக்காலத்தில் கயிலையைச் சென்று காணுதல் மக்களுக்கு எளிதில் கூடுவதோ! தேவர் கட்கும் இப்புண்ணியம் கிடைத்தல் அரிதே. இத்தகைய அரிய கயிலைக்காட்சி தருமையாதீனம் 25ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் தங்கள் திருவருள் உறைப்பினுல் சிறிதும் தளர்ச்சியடையாது செய்த அரிய யாத்திரையால் கிடைக்கப்பெற்று, தங்கள் ஆதீனம் 'திருக்கயிலாய பரம்பரை' என்பதைக் கண்கூடாகக் காட்டியருளி னூர்கள். அதனுல், 'கயிலைக் குருமணி' என்றே அனைவராலும் அவர்கள் போற்றப்பெற்ருர்கள். அவர்கள் கயிலாய தரிசனம் செய்தநாள், அப்பர்பெருமான் திருவையாற்றில் கயிலாயதரிசனம் செய்த ஆடி அமாவாசைத் தினமாகவே திருவருளால் அமைந்தமை வியப்பிற்குரியது. ஆண்டுதோறும் அந்த நாளில் அவர்கள் தருமையில் கயிலாயப் படத் திருவீதியுலாச் செய்வித்துத் தங்கள் கயிலைக்காட்சியை நினைவுகூர்ந்து மகிழ்வார்கள்.

ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணி அவர்களது திருவருள் நோக்கைப் பெற்று இது பொழுது இவ்வாதீனத்தில் 26 ஆவது குருமகா சந்நிதானமாக அருளாட்சி செலுத்திவரும் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் இயல்பாகவே தங்களுக்குஉள்ள ஆசாரிய பக்தி, இறையன்பு, திருமுறை ஆர்வம் முதலியவற்ருேடு, திருக்கயிலாய பரம்பரையாகிய தங்கள் ஆதீன பரம்பரையில் 25 ஆவது கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்கள் பெற்றருளிய அரிய திருவருட்பேற்றைத் திருவுளத்தடைத்து இக்கயிலைக் காட்சி விழாவைக் கொண் டாடத் திருவுளம் பாலித்தபடி, திருமுறை அகண்ட பாராயணம், திருக்கயிலாயத் திருமுறைச் சொற்பொழிவு, திருமுறைப் பாரா யணத்துடன் வெள்ளி ரதத்தில் திருக்கயிலைப் படத் திருவீதி உலா முதலியவற்றுடன் விழா சிறப்புற நிகழ்ந்தமை அன்பர் களது கண்ணிற்கும், கருத்திற்கும் அருள் விருந்தாய், கடல்சூழ் புவியில் உள்ள தலங்கள் எல்லாவற்றிலும் கயிலாய நாதனையே காணும்பேற்றினை வழங்கினமை அனைவர் உள்ளங்களிலும் பன் னாள் நின்று நிலவுவதாகும். இத்தகைய நல்விழாப் பொலிவினைக் காணப் பெறும் நாட்கள் அல்லவோ, மண்ணினிற் பிறந்தார் தாம் பிறந்த பயனைப் பெறும் நாள்!

வெள்ளி விழாக்காண இருக்கும்

## தருமையாதீனப் பல்கலைக் கல்லூரியின்

# தோற்றமும் வளர்ச்சியும்

திருநெறிச்செம்மல், நல்லிசைப்புலவர்,

**வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர்**

உனக்குப் பணிசெய்ய உன்றனையெந் நாளும்
நினைக்க வரமெனக்கு நீதா — மனக்கவலை
நீக்குகின்ற தென்மதுரை நின்மலனே எவ்வுலகும்
ஆக்குகின்ற சொக்கநா தா. சொக்கநாதவெண்பா.

### தமிழின் சிறப்பியல் :

இருந்தமிழே உன்னால் இருந்தேன், 'வானோர் விருந்து அமிழ்தம் என்றாலும் வேண்டேன்' என்று தமிழ்விடுதூது ஆசிரியர் பாராட்டுவர். செந்தமிழ் மொழி சுவைமிக்க உயர்தனிச் செம்மொழியாய் உலகப் பெருமொழிகளுள் ஒன்றாக விளங்குவது உலக நாகரிகங்கள் ஓங்குதற்கு முன்பே ஓங்கி விளங்கிய பெருமை உடையது தமிழர் நாகரிகம். அறிவியல், மொழியியல், வாழ்வியல் முதலிய எத்துறையிலும் சிறந்து விளங்கிய தமிழ், சங்ககாலத்தில் மூவேந்தர் அரியணை நிழலில் சிறப்பிடப்பெற்று விளங்கியது. தென்பாண்டி மன்னர்கள் அமைத்த தலைச்சங்கத்தில் நம் திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளும், குன்றமெறிந்த குமரவேளும் தலைமைப் புலவர்களாக இருந்து தமிழாராய்ந்தனர் என்பது தமிழ்ச்சங்க வரலாறு. பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின் சென்றோர் திருமால் என்று குமரகுருபரர் கூறுவர். இவ்வாறு செந்தமிழ் மொழி தெய்வத் திருமொழியாக வியங்கியதையும் இலக்கிய வரலாறுகளில் காண்கின்றோம். மொழியை விழியாகக் கருதி மூவேந்தர்கள் தமிழ்மொழியைப் போற்றிப்புரந்ததைச் சங்க நூல்கள் காட்டுகின்றன. முச்சங்கங்களில் எழுந்த இலக்கிய இலக்கணப் பெருநூல்கள் எண்ணற்றவை. இவற்றுட் காணப்பெறும் அக்காலத் தமிழ் மக்களது உயரிய வாழ்வியல் முறைகளைக் கற்றோர் பாராட்டுகின்றனர்.

## மூவேந்தர்களும் தமிழும் :

சேர; சோழ, பாண்டியர்கள் செந்தமிழ் வளர்த்த காலத்தின் பின் களப்பிரரும், பல்லவர்களும் தமிழ்ப்பணி புரிந்தனர். தமிழ் நாவலர்களை ஆதரித்தனர். இவ்வாறு இடைக்காலத்தில் தமிழ் வளர்ந்து செழித்தது; தழைத்துப் பெருகிற்று. பக்தி இலக்கியங்கள் பழைய சங்ககாலப் பாடல்களோடு இணைந்து பரவிற்று. மூவர் தமிழும் பன்னிருவர் பைந்தமிழுமாக சைவ வைணவப் பேரின்பப் பெருவாழ்வுக் கருவூலங்கள் பெருகலாயின.

## மடாலயங்கள் :

மூவேந்தர்கள் களப்பிரர் பல்லவர்கள் ஆட்சிக்குப்பின் நாடு சிதருண்டது. குறுநில மன்னர்களும், வடஇந்திய மன்னர்களும், முகமதியர்களும் தமிழக மண்ணில் குடியேறினர். தமிழ் மொழியும் தமிழ்ப் பண்பாடுகளும் நிலைகுலையத் தொடங்கின. காலச் சுழலில் சிக்குண்டு நிலைதடுமாறிய நேரங்களில் தமிழையும் தமிழ்க் கலைகளையும் அரண்போலமைத்துக் காத்தபெருமை சைவமடாலயங்கட்குரியது. சைவ மடாலயங்களின் தலைவர்களாக விளங்கிய தவப்பெருஞ்செல்வர்கள் சிறந்த தமிழ்ப்பெரும் புலவர்களாகவும் திகழ்ந்தனர். தமிழ்ச்சுவடிகளைப் பாதுகாத்தும் தமிழ்ப் புலவர்களை ஆதரித்தும் தமிழ்க் கலைகட்கு வாழ்வளித்தும் பேருதவி புரிந்தனர். சிறுவர்கட்கு உண்டி உறையுள் அளித்து தமிழ்க் கல்வி புகட்டினர். சிறந்த தமிழ் நூல்களை வெளியிட்டனர். திருமடங்களின் வழி எண்ணற்ற ஞான நூல்கள் தோன்றின.

## தருமையாதீனத் தமிழ்த்தொண்டு :

கி. பி. 16 ஆம் நூற்றாண்டில் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகளால் நிறுவப்பெற்ற தருமையாதீனத்தில் இருந்த தவப்பெருஞ் செல்வர்கள் வழங்கிய பைந்தமிழ்ச் சாத்திரப் பனுவல்கள் பண்டார சாத்திரம் என்னும் பெயருடன் தோன்றிப் பரவின. 10 ஆவது குருமூர்த்திகளாக விளங்கிய ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக சுவாமிகள் வழங்கிய செந்தமிழ்த் தோத்திரப்பாக்கள் நெஞ்சம் உருக்கும் நீர்மையும், இறைவன் இணையடிகளில் உயிரைச் சரண் புகுவிக்கும் ஒட்பமும் உடையன. தருமையாதீனத் திருக்கூட்டத்து அடியவர்களில் ஸ்ரீ குமரகுருபரர், ஸ்ரீ வெள்ளியம்பலவாணர், ஸ்ரீ சம்பந்த சரணாலயர், ஸ்ரீபடிக்காசு முனிவர், ஸ்ரீதமிழாகரர் போன்றவர்கள் ஆற்றிய தமிழ்த் தொண்டுகளை உலகம் அறியும்.

## ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி :

இவ்வாறு தமிழும், சைவமும் தழைத்தினிதோங்க அருளரசு புரிந்த இவ்வாதீனத் திருமடத்தின் 25 ஆவது குருமூர்த்திகளாக எழுந்தருளியவர்கள் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்.

நிலையான அறங்கள் பலவற்றையும் தெய்விகத் திருப்பணிகள் பலவற்றையும் செய்த அருள் திறம் உடையவர்கள். இவர்கள் செய்துள்ள தமிழ்ப்பணிகள் பலவாகும். திருக்குறள் உரைவளம் வழங்கியும் திருமுறைகளைக் குறிப்புரைகளுடன் வெளியிட்டும் தருமையாதீனப் பழம்பெரும் நூல்களாகிய முத்தி நிச்சயப் பேருரை, ஞானாவரண விளக்கம் முதலிய ஞான நூல்கள் மற்றும் பண்டார சாத்திர உரை விளக்கங்கள் முதலிய ஐந்நூறுக்கு மேற்பட்ட நூல்களை வெளியிட்டும், அருந்தொண்டாற்றியவர்கள். புலவர் பெருமக்கள் பலரை ஆதீனப் புலவர்கள் என்று விருதுகள் அளித்து ஆதரித்தவர்கள். ஆவணி மூலத் திருநாளில் புலவர் பெருமக்கட்குப் பட்டங்கள் வழங்கிப் பொன்னுடை போர்த்திச் சிறப்பிக்கும் மரபைத் தோற்றுவித்தவர்கள். செந்தமிழ்ப்பூம்பொழில் என்ற அருளுபதேச மொழிகள் அடங்கிய நூல்களை வழங்கியவர்கள். கல்லூரிகள், உயர்பள்ளிகளில் பயின்று தமிழில் முதல் தகுதிபெறும் மாணவர்கட்குப் பொற்பதக்கங்கள் வழங்கி ஊக்கம் அளித்தருளியவர்கள். சிறந்த மாநாடுகள் நிகழ்த்தி செந்தமிழ்ப் புலவர்களின். அறிவாராய்ச்சிச் சொற்பொழிவுகளை உலகம் கேட்டு உய்தி பெறச் செய்தவர்கள். இமயம் முதல் குமரி வரை யாத்திரைகள் செய்து அருளனுபவம் தேக்கி கயிலை கண்டு கனகாபிஷேகம் கொண்டருளிய தவ வேந்தராக விளங்கிய ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் சிவஞானப் பண்ணையாக விளங்கிய தருமையைத் தமிழ்ப்பண்ணையாகவும் செய்தருளத் திருவுளங்கொண்டார்கள்.

## பல்கலைக் கல்லூரியின் தோற்றம் :

குருகுலவாசமாக மாணவர்கள், ஆசிரியர்களை அடுத்து நின்று பாடங்கேட்டனர் அக்காலத்தில்; இக்காலச்சூழலில் எண்ணற்றோர் அக்கல்வி நலம் பெறத் தனிப்பெருங்கல்லூரி தான் பயன்தரும் என்று கருதிற்று ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் திருவுள்ளம். இவ்வாறு கருதிய குருமணி அவர்கள் திருவுள்ளத்தே விரைவில் தமிழ்க் கல்லூரி ஒன்று தொடங்க வேண்டும் என்ற திருக்குறிப்பு அரும்பிற்று.

ஆதீனத் திருக்கூட்டத்து அடியவர்கள், தவஞானங்களுடன் கலைஞானங்களும் நிரம்பியவர்களாய் விளங்கி, செந்தமிழ்ப்பணிகளும் சிவப்பணிகளும் புரிந்துவந்த திருமரபினர். அவர்களை உலகியற் கல்விபெறச் செய்து சிறந்த புலவர்களாக்க - நாடெங்கும் அனுப்பிச் சமயப்பணிகளும் தமிழ்ப்பணிகளும் செய்விக்க வேண்டும் என்று விரிவாகச் சிந்தித்து ஆதீன அடியவர்கள் பலரும் பயிலும் கல்வி நிலயமாக இதனை அமைக்கவேண்டும். மற்றவர்களும் அவர்களோடு உடன் கற்றுப் பயன்பெறட்டும் என்று கருதியவர்களாய் ஒருநாள் ஆதீனத் திருக்கூட்டத்து அடியவர்களாக விளங்கிய ஸ்ரீமத் கந்தசாமித் தம்பிரான் சுவாமிகள் (தவத்திரு குன்றக்குடி அடிகளார்) ஸ்ரீமத் சோமசுந்தர தம்பிரான் சுவாமிகள் (தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள், ஸ்ரீமத் மாணிக்கவாசகத் தம்பிரான் சுவாமிகள் ஆதீனத்தேவார பாடசாலை மாணவர்களில் ஐந்தாண்டுப் பயிற்சி முடித்த வி. சா. குருசாமி, வை. சு. தண்டபாணி, கோ. முருகையா ஆகிய அனைவரையும் அழைத்து தமிழ்வித்துவான் வகுப்புக்குரிய புதுமுக வகுப்புத் தேர்வுக்குப் படிக்குமாறு அருளாணை பிறப்பித்தார்கள். வித்துவான் திரு. மு. ஆறுமுக தேசிகர் அவர்களையும் மாயூரம் தேசியஉயர்பள்ளித் தமிழாசிரியர் திரு. கோபால கிருஷ்ணபிள்ளை அவர்களையும், ஸ்ரீமத் நாகலிங்கத் தம்பிரான் சுவாமிகளையும் ஆசிரியர்களாக நியமித்தார்கள். ஸ்ரீலஸ்ரீ குருமணி அவர்களுடைய அருளாசியோடு செந்தமிழ்த் தெய்வமாக விளங்கும் தருமை ஸ்ரீ சொக்கநாதப்பெருமான் திருமுன்னிலையில் நல்லதோர் நாளில் புகுமுக வகுப்புத் தொடங்கி நடைபெற்றது.

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் ஆசிரியர்களையும், திருக்கூட்டத்து அடியவர்களையும் அடிக்கடி அழைத்து கல்வியில் ஊக்கமளித்தும் அருளினார்கள். திருமடத்துக்கு வருகின்ற அன்பர்களிடமெல்லாம் வித்துவான் வகுப்பு நடைபெறுவதையும் மாணவர்களை அழைத்து, கேள்விகளைக் கேட்டு விடையளிக்கச் சொல்லி மகிழ்விப்பதையும் கண்ட அன்பர்களின் உள்ளம் ஸ்ரீலஸ்ரீ குருமணி அவர்களின் தமிழார்வத்தைக் கண்டு வியப்பெய்தும். தமிழ்ப் பேரறிஞர்கள் பலரைக்கொண்டு தேர்வுகள் நடத்தி மாணவர்களின் தேர்ச்சி நிலைகளைக்கண்டு மகிழும் குருமணி அவர்களின் தாயன்பின்தரத்தை எவ்வாறு உணர்ந்து போற்றமுடியும். மாணவர்கள் அனைவரும் பல்கலைக் கழகப் புகுமுகத் தேர்வுகளை நன்முறையில் எழுதி வெற்றி பெற்றனர்,

## பல்கலைக் கல்லூரித் திறப்பு :

புகுமுக வகுப்பில் தேர்ந்தபின் முதனிலை நிறைனிலை வகுப்புக்களை, கல்லூரிகளிலிருந்தே மாணவர்கள் கற்கவேண்டும் என்பது பல்கலைக் கழக விதி. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் தருமையிலே கல்லூரி தொடங்கவேண்டும் என்று திருவுளம் பற்றினார்கள். பல்கலைக்கழக இசைவு கிடைத்தது, விய ஆண்டு ஆடித்திங்கள் 18 ஆம் பெருக்கன்று (2–8–1946) தருமையாதீனம் ஆதீன தேவஸ்தானங்களின் கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரி, விநாயகர் கலைமகள் வழிபாடுகளுடன் தொடங்கப்பெற்றது. தமிழ் வித்துவான் வகுப்பும், வடமொழி சாகித்திய சிரோமணி வகுப்பும் தொடங்கப்பெற்றன. தமிழக அறநிலைய அமைச்சர் மாண்புமிகு கோட்டி ரெட்டிகாரு அவர்களைக்கொண்டு சிறந்த முறையில் கல்லூரித் திறப்புவிழா 10—8—1946 அன்று நடைபெற்றது.

பழம்பெரும் எழுத்தாளரும் வடமொழி வித்தகரும் அப்பய்ய தீக்ஷிதர் வழிவந்த அருங்கலைவிநோதருமான பிர்மஸ்ரீ. ய. மகாலிங்க சாஸ்திரிகள் M. A., B. L., கல்லூரியின் முதலாவது முதல்வர் என்னும் பெருஞ்சிறப்புக்கு உரியவராய் விளங்கினார்கள். பெரும் நாவலர் திரு. பு. சி. புன்னைவனநாத முதலியார், வித்துவான், திரு. மு. ஆறுமுக தேசிகர் சிரோமணி திரு. சி. இராசகோபால சாஸ்திரிகள், சிரோமணி திரு. இ. எஸ். கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரியார் முதலிய பலரும் பேராசிரியர்களாக விளங்கி தமிழ் வித்துவான் வகுப்பையும், வடமொழி சிரோமணி வகுப்பையும் நடத்தி வரலாயினர் முதனிலை வகுப்பில் தொடங்கிய கல்லூரி நான்காண்டுகளில் முதுநிலைக் கல்லூரியாக வளரத் தொடங்கிற்று. தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் மாணவர்கள் வந்து இலவச உணவும், உறையுளும் பெற்று கல்வி பயின்று வரலாயினர்

## கல்விக்குழு :

இக்கல்லூரிக்கென தனியே கல்விக்குழு ஒன்று அமைக்கப்பெற்றது. கல்லூரியின் வளர்ச்சியில் ஈடுபாடுகொண்டு உதவி வருகின்றது. கல்லூரியின் புரவலராக விளங்கிவரும் தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் இக் கல்விக் குழுவின் தலைவராகவும் இருந்து அருள்பாலிக்கிறார்கள். உறுப்பினர்களாக 1. வித்துவான். ஸ்ரீமத். இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள், 2. திரு. B. முத்துக்குமாரசுவாமி முதலியார், 3. திரு. A. கல்யாண

சுந்தர தேசிகர், 4, திரு. M. சுப்பையா முதலியார். 5. திரு. S. V. சுப்பிரமணிய அய்யர் (ஆதீனம் மானேஜர், கல்லூரிச் செய்தியாளர்), 6. கல்லூரி முதல்வர் ஆகியோர் இருந்துவருகின்றனர்.

## முதல்வர்கள், பேராசிரியர்கள் :

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி, தமிழகத்தின் தனிப்பெரும் கல்லூரியாக விளங்கத் துணை நின்றவர்கள் பேராசிரியர்கள் ஆவர். தமிழகத்தின் தலைசிறந்த புலவர் பெருமக்கள் இக்கல்லூரியின் பேராசிரியர்களாக இருந்தார்கள். சமய நூல் அறிவும், புலமை நலமும் வாய்க்கப்பெற்ற பெருமக்கள் பேராசிரியர்களாக விளங்கினர். மகாவித்துவான், திரு. ச. தண்டபாணி தேசிகர் இக்கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவராக இருந்து பணி செய்தவர்கள். முதுபெரும் புலவர் முத்து சு. மாணிக்கவாசக முதலியார், (காஞ்சி தொண்டை மண்டல ஆதீனம் மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்) ஆட்சிச் சொற் காவலர் திரு. கீ. இராமலிங்கனர், முதுபெரும் புலவர் திரு. சி. அருணைவடிவேல் முதலியார் போன்ற சிறந்த தமிழ்ப் பெரும் புலவர்கள் முதல்வர்களாக - பேராசிரியர்களாக விளங்கினர்கள். தருமையாதீனம் 26-வது குருமகாசந்நிதானமாக எழுந்தருளி விளங்கும் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் இக் கல்லூரியில் கவுரவப் பேராசிரியராக விளங்கியவர்கள் என்பது பெருமைக்குரிய செய்தியாகும்.

1 திரு. Y. மகாலிங்க சாஸ்திரி M. A., B. L.
(2—8—1946 முதல் 30—6—55)

2 ,, C. புன்னைவனநாத முதலியார்
(2—8—1946 முதல் 14—8—1950)

3 ,, K. ராஜகோபால சாஸ்திரி (2—8—1946 முதல் 1959)

4 ,, M. ஆறுமுக தேசிகர் (2—8—1946 முதல் 1—3—1954)

5 ,, S. தண்டபாணி தேசிகர் (28-6-1948 முதல் 6-7-1954)

6 ,, E. S. கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரி
(10—8—1949 முதல் 10—11—1952)

7 ,, வி. சா. குருசாமி தேசிகர் (1—9—1950 முதல்
பணியாற்றுகிறுர்.

8 ஸ்ரீமத். சோமசுந்தர தம்பிரான் சுவாமிகள்
(1—9—1950 முதல் 26—8—1951) கவுரவப்பேராசிரியர்

9 திரு. சிங்காரவேலு சேதிராயர் (27-8-1951 முதல் 27-11-1951)

10 ,, முத்து சு. மாணிக்கவாசக முதலியார்
(10—7—1952 முதல் 19—1—1956) பேராசிரியர்
(20—1—1956 முதல் 26—6—1961) முதல்வர்.

11 ,, C. சிங்காரவேலு (1—3—1954 முதல் 18—12—1963)
பேராசிரியர், (19—12—66 முதல் 30—6—67) முதல்வர்.

12 ,, N. சம்பந்தம் (5—7— 954 முதல் 30—6—55)

13 ,, ச. சேது சுப்பிரமணியப் பிள்ளை
(14—9—1954 முதல் 30—6—56)

14 ,, கி. இராமலிங்கனர் (15—11—1954 முதல் 19—1—1956)

15 ,, V. சபேசன் (7—7—1956 முதல்) பணியாற்றுகிறர்

16 ,, S. வேங்கடராம செட்டியார் (27-7-56 முதல் 20-8-1957)

17 ,, P. திருமால் (10—9—56 முதல் 10—12—1956)

18 ,, M. சிவசம்பு (10—12—1956 முதல் 10—6—1961)

19 ,, S. அருணை வடிவேல் முதலியார்
(1—7—1962 முதல் 21—6— 5970)

20 திருமதி ப. நீலா (22—6—1964 முதல்) பணியாற்றுகிறர்

21 திரு. இரா. செல்வக்கணபதி (10—7—70 முதல்)
பணியாற்றுகிறர்

எழுத்தர் :- M. சுப்பராம அய்யர் (1—6—1958 முதல்)
பணியாற்றுகிறர்

## ஆதீன அடியவர்கள் :

ஆதீனத் திருக்கூட்டத்து அடியவர்கள் பலரும் இப்பல்கலைக் கல்லூரியில் பயின்று வித்துவான் பட்டம்பெற்று விளங்கினர். தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானமாக இப்போது எழுந்தருளி அருளரசோச்சி வரும் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களும், திருவண்ணமலை ஆதீனம் குன்றக்குடி மடாலயத்தில் குருமகாசந்நிதானமாக இப்போது எழுந்தருளி விளங்கும் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணசல தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களும், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களும் இக்கல்லூரியில் பயின்றவர்கள் என்பது பெருமைக்குரிய செய்தியாகும்.

தருமையாதீனம் சென்னை சமயப் பிரசார நிலையத்தில் பணியாற்றிவரும் வித்துவான் ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள், திருநள்ளாறு தேவஸ்தானம் கட்டளை விசாரணை

வித்துவான் ஸ்ரீமத் சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகள் ஆகியோர் இக்கல்லூரியில் பட்டம்பெற்ற ஆதீன திருக்கூட்டத்து அடியவர்கள் ஆவர்.

## ஆயிர ரூபாய்ப் பரிசுகள் :

சென்னை மாநிலத்திலேயே தமிழ் வித்துவான் வகுப்பில் முதன்மையாகத் தேர்ச்சி பெற்று திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தின் 1000 ரூபாய் பரிசுகளைப் பெற்றவர்கள் நால்வர். இக்கல்லூரியின் முதல்வராக இருந்து இப்போது மாயூரம் A. V. C கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராக விளங்கும் திரு. சொ. சிங்காரவேலன், ஆதீனத் தமிழ்க் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக விளங்கும் வித்துவான் திருமதி. ப நீலா, வித்துவான் திரு. இரா. செல்வக்கணபதி, செங்கற்பட்டு மாவட்டத்தில் பணி ஆற்றிவரும் வித்துவான் திரு. சி. கோவிந்தசாமி, ஆகியோர் ஆவார்.

## பல மாவட்டங்களிலிருந்தும் :

தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் மாணவர்கள் இங்குவந்து கல்வியறிவும் சமய நூலறிவும் பெற்றுச்செல்கின்றனர். தஞ்சை, திருச்சி, நெல்லை, குமரி, மதுரை, இராமநாதபுரம், சேலம், செங்கற்பட்டு முதலிய பல மாவட்டங்களிலிருந்தும் மாணவர்கள் பயின்று செல்கின்றனர். கடல்கடந்த நாடுகளிலிருந்து வந்து கன்னித் தமிழ் பயின்று சென்றோரும் பலராவர்.

## சமய நூலறிவு :

தருமையாதீனத்திற்கு வரும் பல பெரியோர்களுடைய சமய இலக்கிய விரிவுரைகளைக் கேட்கும் நல்வாய்ப்பை மாணவர்கள் பெற்று வருகின்றனர். ஆதீனத் தொடர்பான விழாக்கள், மாநாடுகள் பலவற்றிலும் கலந்துகொண்டு சமய நூலறிவும் ஒழுக்கமும் சமயப் பண்பாடும் உடையவர்களாய் விளங்கி வருகின்றனர். சிறப்பாகக் கல்லூரியில் தமிழ் வித்துவான். பாடத் திட்டங்களோடு சைவ சித்தாந்தப் பாட வகுப்புக்களும் நிகழ்த்திச் சான்றிதழ்களும் ரொக்கப் பரிசுகளும் வழங்கப்பட்டு வருகின்றன. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களின் கனகாபிஷேக நினைவாகச் சைவ சித்தாந்தக் கல்லூரியும் இதனோடு இணைக்கப்பட்டு நடந்து வருகிறது. நிகழாண்டில் முதுபெரும் புலவர், சித்தாந்தக் கலைமணி. திரு. சி. அருணைவடிவேலு முதலியார் சமய பாட வகுப்புக்களை நிகழ்த்தி வருகின்றார்கள்.

## மாணவர்கள் தேர்ச்சியும், வளர்ச்சியும் :

இக்கல்லூரியில் பயின்று புலவர் பட்டம் பெற்றுத் தமிழ் ஆசிரியர்களாகத் தமிழ் நாட்டின் பல பகுதிகளிலும் 480 புலவர்கள் பணி செய்கின்றனர். தமிழ்ப் புலமைத் துறையில் சிறந்து விளங்கி மேலும் பல பட்டங்கள் பெற்றுச் சிறந்து விளங்குகின்றனர். சமயத்துறையில், இலக்கியத்துறைகளில் அரசியல் துறைகளில் மேம்பட்டு விளங்கி வருகின்றனர்.

வித்துவான் திரு. சொ. சிங்காரவேலன் அவர்கள், M A. Dip. Ling என்ற பல்கலைக் கழகப் பட்டங்கள் பெற்றும், செஞ்சொற்கொண்டல் என்ற சிறப்பு விருதுகள் பெற்றும் மாயூரம் A.V.C. கலைக்கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகப் பணி செய்கின்றார். டாக்டர். பட்டத்திற்கு 'அப்பர் தேவாரம்' ஆராய்ச்சிக் கட்டுரை நூல் எழுதியனுப்பியுள்ளார். வித்துவான். பழநி அரங்கசாமி ஆங்கில மொழிப் பயிற்சியில் எம். ஏ. பட்டம் பெற்று மதுரைப் பல்கலைக் கழக அஞ்சல் துறையில் ஆங்கிலப் பிரிவில் பணிசெய்கின்றார். வித்துவான் திரு. இராமாநுசம் அவர்கள் எம். ஏ. பட்டம்பெற்று கடலூர் அரசினர் கலைக் கல்லூரியில் துணைப் பேராசிரியராக விளங்குகின்றார். வித்துவான் திரு. இல செ. கந்தசாமி அவர்கள் எம். ஏ., பட்டம் பெற்று கோவை வேளாண்மைப் பல்கலைக் கழகத்தில் துணைப் பேராசிரியராகப் பணியாற்றுகிறார். புலவர். திரு. அறிவுடை நம்பி தமிழக சட்டமன்ற மேலவை உறுப்பினராக விளங்கிவருகின்றார். புகழ்பெற்ற சமய நூற்பேச்சாளரும் பட்டிமன்ற மணி கதா ரத்தினம் முதலிய விருதுகள் பெற்று நாடு முழுதும் சென்று சென்று விரிவுரையாற்றி மகிழ்விக்கும் புலவர். திரு. கீரன் அவர்கள் இக்கல்லூரியிற் பயின்றவர். இவ்வாறு மேலும் மேலும் தங்கள் தகுதிகளை உயர்த்தி B. A., M. A. பட்டங்கள் பெற்றுச் சிறந்து விளங்கும் மாணவர்கள் பலராவர்.

## கல்லூரியின் தனிச்சிறப்பு :

சென்ற இடங்களிலெல்லாம் சிறப்புக்கள் பெற்று தருமைக்குத் தனிப்புகழ் சேர்க்கும் மாணவச் செல்வங்கள் பலராவர். ஆண்டு தோறும் இக்கல்லூரியிற் பயின்று தேர்ந்த புலவர்களை, தங்கள் கல்வி நிறுவனங்களுக்கு வேண்டிப் பெறுவது இக்கல்லூரிக்குத் தனிச்சிறப்பு. சிறந்த கல்வியறிவும், சமய நூலறிவும், ஒழுக்கமும் உடையவர்களாய் மாணவர்கள் விளங்குவர் என்ற நம்பிக்கையைப் பாதுகாத்து வருகிறது இக்கல்லூரி.

**மாணவர் கழகம் :** தருமையாதீன முதற்குரவர் ஸ்ரீ குருஞான சம்பந்தர் திருப்பெயரால் கல்லூரி இலக்கிய மன்றம் நிகழ்ந்து வருகிறது. நால்வர் நற்றமிழ் மன்றம் என்ற பெயரில் தோன்றி வளர்ந்தது இக்கழகம். இதன் முதற் செயலராக இருந்து நன் முறையில் நடத்தியவர்கள் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள். இன்று புகழ்பெற்ற பேச்சாளர்களாக விளங்கும் இக்கல்லூரி பழைய மாணவர்கள் பலரும் இவ்விலக்கிய மன்றம் அளித்த நாவலர்களாவர். ஆண்டுதோறும் கட்டுரை, கவிதை பேச்சுப் போட்டிகள் நிகழ்த்தி பரிசுகள், சான்றிதழ்கள் வழங்கி மாணவர்களை ஊக்க முறுத்தியும் சிறந்த சொற்பொழிவாளர்களை அழைத்து விழா நிழழ்த்தியும் விரிவுரை ஆற்றச் செய்தும் மாண வர்கள் பயனடையுமாறு செய்து வருகிறது.

ஆதீனத் திருமடத்தில் நிகழும் பல்வகை விழாக்களிலும் மாணவர்கள் சிறந்த இலக்கிய சமய நாடகங்கள் நிகழ்த்தி இன்புறுத்தி வருகின்றனர். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளியிருந்து மாணவர்களது கலையார்வத்தைக்கண்டு மகிழ்ந்தும் பரிசுகள் வழங்கியும் ஊக்குவித்தருளுகிறார்கள். நாடகங்களுக்கென வண்ணத்திரைச் சீலைகள் பெரும்பொருட் செலவில் தயாரிக்கப்பட்டுள்ளது.

## சாரணர் குழு :

மாணவர்கள் பொதுப்பணிகளில் ஈடுபட்டுப் பொதுப்பணி செய்யும் பழக்கத்தையுடையவர்கள் ஆதற் பொருட்டும் பிறர்க்கு உதவி செய்யும் பண்புடையவர்களாக விளங்குதற் பொருட்டும் சாரணக்குருலையர் குழாம் அமைக்கப்பெற்றது.

## மாணவர்கள் தேர்ச்சி நிலை :

| ஆண்டு | | தேர்வெழுதி யோர் | | தேர்ச்சி பெற்றோர் |
|---|---|---|---|---|
| 1950 | — | 5 | — | 5 |
| 1951 | — | 7 | — | 5 |
| 1952 | — | 9 | — | 9 |
| 1953 | — | 9 | — | 7 |
| 1954 | — | 16 | — | 16 |
| 1955 | — | 15 | — | 14 |
| 1956 | — | 19 | — | 14 |
| 1957 | — | 22 | — | 22 |
| 1958 | — | 25 | — | 25 |
| 1959 | — | 36 | — | 24 |

[ தொடர்ச்சி 541ம் பக்கம் பார்க்க ]

தருமையாதீனத் திருமடத்தில்



சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர்
உயர்திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்கட்கு
தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்
பொன்னுடை போர்த்தி ஆசி வழங்குதல்

தருமை ஆதீனத் திருமடத்திற்கு
அமெரிக்காவிலிருந்து பேராசிரியர்கள் வருகை



திருவாளர்கள்:

டாக்டர். உதயமூர்த்தி
,, ஆலன் ஃ பிக்ஸ்டாட்
,, விக்டர் மகாருசோ
,, ஜான் ரெயிலி ஜானியா
சகோதரி மேரி ஆஞ்செலிகா வோகல்

சிவதருமோத்தரக் கட்டுரை எண் 8.

# ஐவகை யாகங்கள்

தருமையாதீனப்புலவர், மகாவித்துவான்.
திரு. ச. தண்டபாணி தேசிகர்

அருள்பவர் :— சிவனது வாக்கியங்களை ஆராய்ந்த ஆறுமுகக் கடவுள்.

கேட்பவர் :— செந்தமிழ் நிலைகண்டுணர்ந்த சிவமுனிவராகிய அகத்தியர்.

விளக்கப்படு பொருள் :— ஐவகை யாகமும். அதன் பொருளும்.

அகத்திய முனிவரே சிதருத சிந்தையுடனிருந்து கேட்பீராக. கன்ம யாகம், தவயாகம், ஜப யாகம், தியான யாகம், ஞான யாகம் என ஐவகை யாகங்கள் உள்ளன.

அவற்றுள் கன்ம யாகமாவது சிவாகமங்களில் கூறிய விதிப்படி வைகறைப் பொழுதில் நீராடி விபூதி தரித்துக்கொண்டு சிவபூசை, அக்னி காரியம் முதலியவற்றைச் செய்தலாம்.

தவயாகமாவது உடல் வாட, உள்ளம் ஒறுங்க, சோமவார விரதம், கார்த்திகை விரதம், சிவராத்திரி விரதம் முதலிய சிவ விரதங்கள் அனுட்டித்தலாம்.

ஜப யாகமாவது சமயம், விசேடம், நிர்வாணம் முதலிய தீக்கையில் குருமுகமாகக் கேட்ட மந்திரங்களை விதிப்படி உச்சரித்தலாம். அதில் மானசீகமாக உச்சரித்தலும், பிறர்செவிக்குக் கேளாமல் உதடு அசைவு மாத்திரத்தில் உச்சரித்தலும், பிறர் செவிக்குக் கேட்கும்படி உரக்க உச்சரித்தலும் என மூவகையுண்டு. அவற்றுள் மானசீகமான உச்சரித்தலே மிக மேலானது, இது மந்திரயாகம் எனவும் பெயர்பெறும்.

பிறர் செவிக்குக் கேட்க மந்திரத்தை உச்சரிக்கும் போது வலதுகை சுட்டுவிரலின் மீது ஜெப வடத்தை வைத்துப் பெருவிரலால் தள்ளிச் செபம் செய்யவேண்டும்.

மானசீக ஜெபம், மனமசையாமல் புருவ நடுவிலோ அல்லது உச்சியிலோ அல்லது உச்சிக்கு மேல் பன்னிரண்டு அங்குல அளவிலோ மனத்தை நிறுத்தி மந்திரப்பொருள் விளக்கொளி போலவும், நிறைமதியொளி போலவும், சூரிய ஒளி போலவும் விளங்குவதாகவும் அது ஒலி வடிவாக இருப்பதாகவும் தியானிப்பது, இந்த மானசீகஜபமே எல்லாவற்றிலும் மேலானது; பெரும்பயனளிப்பது. தியான யாகத்தின் நுழைவாயிலாய் விளங்குவது. ஏனைய ஜபங்கள் இதனில் அடுத்த நிலையிலுள்ளவை. குறைந்த பயனளிப்பவை.

ஜபமாலைக்கு உருத்திராக்கமே சிறந்தது. அதனையடுத்துள்ளது தருப்பையைப் பவித்திர முடிச்சாக முடிந்த மாலை; அடுத்தது தாமரை மணிமாலை. அடுத்தது படிகமணி மாலை, அடுத்தது புத்ரதீபியுருண்டையாலாகிய வடம், அடுத்தது சங்கு மணிமாலை, அடுத்தது கைவிரல்களின் இறை. இவற்றில் உருத்திராக்க மணிமாலையே ஜபத்திற்குச் சிறந்ததும், சிறந்த பயனளிப்பதும் ஆகும். ஏனையவை அடுத்து அடுத்து பயன் குறைவானவை.

ஜபமாலை உருட்டுகின்றவர்களில் போகத்தை விரும்புவோர் கீழ்நோக்கியும் மோட்சத்தை விரும்புவோர் மேல் நோக்கியும் உருட்டுதல் வேண்டும்.

போகத்தை விரும்புவோர் மூச்சுக் காற்று, இடப்பக்க நாடியிலே நடக்கும்போது பிரணவத்தோடு கூடிய மூலமந்திரத்தை அதாவது சிபஞ்சாக்கிரத்தை நினைத்தலும் அல்லது உச்சரித்தலும் முறைமையாம். மோட்சத்தை விரும்புவோர் வலது நாசி வழியாய் மூச்சு இயங்கும்போது அம்மந்திரத்தை எண்ணக்கடவர். போகமோக்கமாகிய இரண்டையும் விரும்புவோர் நடு நாடியாகிய சுழுமுனையில் மூச்சுக்காற்று இயங்கும்போது எண்ணக் கடவுர்.

தியான யாகம் சென்றுபற்றியும், பற்றியதைப் பற்றியும், புலன்களைத் தேடி அலைகின்ற மனத்தைப் பொறிகள் வாயிலாக, புலன்களைச் சென்று பற்றாதபடி நிறுத்தி ஐயம், விபரீதங்களற சதாசிவம் முதலான திருவுருவம் ஒன்றிலேயே தோய்ந்து, அன்போடு கலந்து தியானத்திலிருக்கப் பழகுதலாம். ஆற்றுநீர் தொடக்கமுதல் இறுதிவரை இடையறாது ஒரே நிலையில் ஓடுவது போல மனம் தியானிக்கப் படும் மூர்த்தியிடத்திலேயே நிலைத்திருக்கச் செய்தலாம்.

ஞான யாகமாவது அநாதிநித்ய நின்மலனை சிவனை அறி விக்கின்ற ஞான நூல்களை ஓதுதலும் ஓதுவித்தலும் அவை களிற் சொல்லப்படுகின்ற பொருளை ஐயம் திரிபு அற உணர் தலும், உணர்வித்தலும், தெளிந்த பொருளை நாடோறும் மனத் தின்கண் தரித்தலும் என ஐவகைப்படும். இது பக்குவான்மாக் களுக்குப் புதையல் போல்வது. அபக்குவர்களுக்கு அருந்த ஒண்ணாத மருந்து போல்வது.

## சிறப்பும், பயனும் :—

கன்மயாகம் முதலிய ஐவகை யாகங்களும் ஒன்றற்கொன்று பயனால் விஞ்சியவை. கன்மயாகத்திற்குப் பலவகைப் போகங் களும், தவயாகத்திற்கு எண்ணிய எண்ணங்கள் ஈடேறப் பெறு தலும், ஜபயாகத்திற்கு ஆகாமை வினைகள் மிகாமையும், சஞ்சித பிராரத்த வினைகளின் வலி ஒடுக்கமும், தியானயாகத்திற்குச் சிவரூபமும், ஞான யாகத்திற்கு சாயூச்ச பதவியும் பயன்களாம்.

காமம் குரோதம் உலோபம், மோகம், மதம் மாச் சரியம் முதலான பகைகளுக்கு அஞ்சி அவற்றை வென்று பிறப்பு இறப்புக்குப் பயந்து வருந்தி அவை நீங்கும்வண்ணம் திருவடிப் பேற்றிற்குக் காரணமான பரஞானமாகிய குகையில் வீற்றிருப்பவர் பரயோகர். அவர்களுடைய திருமேனியை நினைப் பவர்களுக்கும் மல கன்மங்கள் பற்றா. இத்தகைய சிவஞானிகளை அருச்சித்தவர் பூமியில் புகழை நிறுவி சிவலோகத்தையடைந்து கற்பகோடி காலம் வாழ்வார்கள்; அதன்பின் போகம் முடிந்த பிறகு வைகுண்டத்திற்குச் சென்று நாராயணன் பக்கத்திலேயே வாழ்வார்கள். அங்கும் போகம், புசித்த பிறகு முறையே பிரமலோகம், இந்திரலோகம் கந்தருவலோகம், இயக்கலோகம் இவற்றிற் பிறந்து இன்புறுவார்கள். அங்கும் போகம் முடிந்த பின்றை பூமியிலே உயர்ந்த சாதியில் தோன்றி விட்ட குறையி னாலே மனம் மாறாமல் உயர்ந்த ஞானாசாரியன் திருவடியை அடைந்து வழிபாடுகள் செய்து அவன் அருள்உள்ளம் சுரக் கும் வரையில் காத்திருப்பார்கள். ஞானாசாரியன் உளம்கனிந்து சிவஞானயோகத்தை அறிவிக்க அறிந்து ஞானநிட்டைகூடி விதேக முக்தி பெற்று சிவத்துடன் இரண்டறக் கலந்து சிவா னந்த அனுபவத்தை அனுபவித்திருப்பார்கள்.

இத்தகைய அனுபூதிமான்கள் விஷய சுகங்களைப் பொருந் தினராயினும் அவருள்ளம் தாமரையிலையில் தண்ணீர்போல விஷய சுகங்களில் அழுந்தாது திருவடியிலேயே திளைத்து

நிற்கும். பரிபாக முற்ற சீடர்களது ஆணவமாதி மலங்களைப் போக்கி ஆட்கொள்ளும் ஆற்றல் பெற்றவர் அவர்களே. மல ரகிதனை சிவன் அவர்களைவிட்டு நீங்காமல் அவர்களிடமாகவே என்றும் வீற்றிருப்பன். அன்பர்கள் அவர்களைப் பூசிக்க அப் பூசனை முழுவதையும் அரனே ஏற்றுக்கொள்கிறான்.

மந்திரம், மருந்து இவற்றில் வல்லவர்கள் நஞ்சினை உண்டாலும், அதனால் சிறிதும் சலிப்பின்றி நிற்றல்போலச் சிவஞானிகள் தம் செயல் மாண்டு எல்லாம் சிவன்செயல் என்றிருக்கையினாலே அவர்கள் செய்யும் புண்ணிய பாவங்கள் அவர்களை ஒன்றும் செய்யாது. அவர்களை இகழ்ந்தோர் துன்பத்தையும் புகழ்ந்தோர் இன்பத்தையும் பெறுவார்கள்.

சிவஞானி பாவங்களைச் செய்யார். செய்தாலும் அதன் பயனை அனுபவியார்; ஆயினும் அவர்கள் பொறி புலன்களுக்கு அடிமைப்பட்டு மன விருப்போடு காமாதி குற்றங்களைச் செய்வாராயின் அவர்களைப் பழிபாவங்கள் தொடரும். எந்தச் சிவஞானி ஞான நிட்டைகூடி சிவானந்தத்தை அனுபவிக்கின்றானோ அவன் கிரியைகளைச் செய்வாராயினும், செய்ய விரும்புவாராயினும் அவர் பரத்துவத்தை அறிந்தவரல்லர் என்பது துணிபு.

இவற்றால் பக்குவம் பெற விரும்புகின்ற ஆன்மா, கன்ம யாகம் முதலான ஐவகை யாகங்களிலும் முறையே பயிலவேண்டுமென்பதூம், ஞானயாகத்தில் திளைப்பவர்களே சிவஞானிகள் என்றும், அவர் நினைப்பன - உரைப்பன - இயற்றுவன - யாவும் சிவன் செயலேயாகும் என்றும், அவர்கள் செய்யும் தீவினை நல்வினை அவர்களை வருத்தா என்றும், அவர்களே தன் முனைப்போடு மனவிருப்போடு செய்வார்களாயின் பழிக்கும் பாவத்துக்கும் ஆளாவார்கள் என்றும், சிவஞானிகள் என்றும் சிவானந்த அனுபவத்தில் அழுந்தியிருப்பாரென்றும் உணர்த்தப்பெற்றன.

[ வளரும் ]

---

## பார்வையாளர் குறிப்பு நகல்

### தருமபுரம் ஆதீனம்

### ஸ்ரீ சட்டைநாதசுவாமி தேவஸ்தானம், சீர்காழி.

சீர்காழி திருப்பதியில் இக் கோயில் மிகவும் சுத்தமாகவும் செம்மையாகவும் பராமரிக்கப்பட்டு வருவது மிகவும் மகிழ்ச்சிக்குரியதாகும்.

(Sd.) G. Ratnavelu
P. A. to S. F. (Madras)

10—6—72.

சிறுகதை

# முடவன் வாய்க்கால்

செஞ்சொற்கொண்டல், புலவர்
திரு. சொ. சிங்காரவேலன் M. A., Dip. Ling.,

வானம் செவ்வொளியில் மூழ்கிக் கிடந்தது, கடமைகளை முடித்துவிட்ட களிப்பில் கதிரவன் மறைந்து கொண்டிருந்தான். விடுதி அறையிலிருந்து வெளியே வந்தேன். ஒரே புழுக்கமாக இருந்தது. காலார நடந்துவந்தால் என்ன என்று தோன்றியது. நகரச் சந்தடியில் வாழ்ந்து பழகிய அலுப்பு அந்தச் சிற்றூர்ச் சூழ்நிலையை நன்றாக அநுபவிக்கத் தூண்டியது. நெடுந்தொலைவில் தெரிந்த பச்சை வயல்கள் என் கலை உள்ளத்தைக் கூவி அழைத்தன.

சிதம்பரம்-தஞ்சாவூர் சாலையின் மேலே நடந்தேன். வைத்தீசுவரன்கோயில் என்று எவ்வளவு அழகாகப் பெயர் அமைந்திருக்கிறது என்று மனம் சிந்தனை அசை போட்டது. வரிசை வரிசையான கடைகளில், மறுநாள் கிருத்திகை ஆதலால் பொருள்களை வாங்குவோர் கூட்டம் மிகுதியாக இருந்தது.

கடைவீதி திரும்பி வடபுறமாக நடந்தேன். மக்கள் முடிக் காணிக்கை செலுத்தும் கொட்டகையும், பக்கத்துக் குளமும் தென்பட்டன. மக்களுக்குத்தான் எவ்வளவு நம்பிக்கை! அந்த நம்பிக்கையின் ஆழத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமானல் வைத்தீசுவரன் கோயிலில் மாதந்தோறும் கிருத்திகைக்கு வரும் ஆயிரக்கணக்கான மக்களையும், சந்தனக்குழம்பு வாங்கி உண்ட பிறகே ஏதேனும் உண்ணும் அன்பர்களையும் பார்த்தாற்போதும் என்று அடிமனம் ஆதார சுருதியாக எண்ணிக்கொண்டேயிருந்தது.

தொடர்ந்து நடந்தேன். கீற்றுக் கொட்டகை, ஏதோ ஒரு பழைய திரைப்படத்தின் பெரிய விளம்பரப்படத்தை முன்னே காட்டிக்கொண்டு நின்றது. கையெழுத்து மறையத் தொடங்கி விட்டது. ஆங்காங்கு சவுக்கு மரங்களில் 'பளிச்' 'பளிச்' சென்று மின்விளக்குகள் எரியத் தொடங்கிவிட்டன. கிராமப்புறமாதலால் அதுவரை ஈ காக்கையைக் கூடக் காணோம். அந்

நேரத்தில் நகரங்களில் நெருக்கடி மிகுந்த திரைப்படக் கொட்டகைகளை ஒப்பிட்டுப் பார்த்தபடியே நடந்தேன்.

இருபுறமும் பசும் வயல்கள்; காற்றில் தலைசாய்ந்தாடிய நெற் பயிர்கள் கண்ணுக்குக் குளிர்ச்சியைத் தந்தன. நெடுந் தொலைவில் நீலவானில் கரும்பிழம்பாகத் தெரிந்த பெரியகோயிற் கோபுரம் மனத்தில் வைத்தியநாதப் பெருமானை நினைவூட்டியது. 'தீராநோய் தீர்த்தருள வல்லான்' என்று எப்போதோ படித்த அப்பர் தேவார வரியில் உள்ளம் ஒன்றியது.

பக்கத்துக் கிராமத்துக்குச் செல்லும் எளியமக்கள் தங்கள் இரவுச் சாப்பாட்டிற்கான உணவுப் பொருள்களை வாங்கிக் கொண்டு, தங்கள் சம்பந்தப்பட்ட விவரங்களை, பிறர் செவிகளில் விழுவதும் உணராமல், உரத்துப் பேசிக் கொண்டே உற்சாகமாக நடந்துகொண்டிருந்தார்கள். ஏழ்மை அவர்கள் சொத்தென்றாலும், எத்தனை உற்சாகம் அவர்கட்கு என்று என்னுடைய படித்த மனம் எடையிட்டுப் பார்த்தது. 'பொருள் உடைமைக்கும் மனத்தின் மலர்ச்சிக்கும் இடைவெளி அதிகந்தான் என்று நேற்றுக் கல்லூரிப் பட்டவகுப்பில் விரிவுரையாற்றும்போது என்னை அறியாமல் நான் வெளியிட்ட சொற்றொடர்கள் நினைவில் எழுந்தன.

எனக்குள் சிரித்துக் கொண்டேன்.

நன்றாக இருட்டிவிட்டால் விடுதிக்குச் செல்லச் சிரமமாக இருக்குமே என்று நினைத்தேன். சாலை ஓரமாக இருந்த வாய்க்கால் மதகின்மீது சற்று உட்காரலாமே என்ற நினைப்பு; கிராமத்தில்தான் எவ்வளவு உரிமையாகச் செயல்பட முடிகிறது. நகரத்தில் இவ்வாறு முடியுமா என்று எனக்குள் கேட்டுக் கொண்டபடியே மதகின்மீது துண்டை உதறி விரித்து உட்கார்ந்து கால்களைத் தொங்கவிட்டுக்கொண்டேன். வெளிச்சம் மங்கியும் மங்காமலும் இருந்த அந்த வேளையில், வாய்க்காலின் பெயர், நீளம், பாசன எல்லைகளைக் குறித்த சிமிட்டிப் பலகையை நிமிர்ந்து நோக்கினேன். "முடவன் வாய்க்கால்" என்ற பெரிய எழுத்துக்கள் கண்ணிற்குப் புலப்பட்டன.

'முடவன் வாய்க்கால்' என்ற சொற்கள் சிந்தனைக்கு விருந்து வைத்தன. யார் இந்த முடவன்? அவனுக்கும் வேலூருக்கும் தொடர்பு என்ன? அல்லது வாய்க்கால் அவன் பெயரால் வழங்கப்படுவானேன்? என்றெல்லாம் படித்த அறிவு, வினாக் குறிகளை எழுப்பிக் கொண்டிருந்தது.

வாய்க்காலின் பெரிய கரையோரமாக யாரோ ஒருவர் கிழக்கேயிருந்து நடந்துவந்து, சாலையில் என் எதிர்ப்புறமாக வந்து சேர்ந்தார். தலையில் குடுமி; முகத்தில் குறைந்தது நான்கைந்து வாரமாகச் சவரம் செய்யப்படாத மயிர்; மேலே தோளில் ஒரு துண்டு சுருண்டு கிடந்தது. கைகளில் ஒரு குடை. அதை அவ்வப்போது ஊன்றுகோலாகவும் பயன்படுத்தும் வழக்கம் உடையவர் என்பது அவர் நடந்துவரும்போது ஊன்றி வருவதால் தெரிந்தது. முழங்காலுக்குக் கீழ் கொஞ்ச தூரம் வரை இருந்த இடைவேட்டி. நெருங்கிவந்ததும், "தம்பி யாருங்க? ஊருக்குப் புதுசா?" என்று கேட்டபடியே மதகின் மறுகோடியில் உட்கார்ந்தார் அந்தப் பெரியவர்.

அறிமுகமில்லாதவரையும் திறந்த மனத்தோடு தானே வலியப் பேசிப் பழகும் கிராமப்புறத்து நாகரிகத்தின் அடிப்படையை எண்ணி வியந்தபடியே, "ஆம், பெரியவரே! சென்னையில் கல்லூரி ஒன்றில் தமிழாசிரியராக இருக்கிறேன். நாளைக்குக் கிருத்திகை அல்லவா? வழிபாடு செய்ய வந்திருக்கிறேன். தேவஸ்தானத்தைச் சேர்ந்த விடுதி அறை ஒன்றில் தங்கினேன்; காலார நடந்துவந்தேன்" என்று சுருக்கமாக என்னைப் பற்றிய விவரங்களைத் தொகுத்துக் கொடுத்தேன்.

"அப்படிங்"களா? படித்தவங்க இதுமாதிரி வழிபாடு எல்லாம் விடாமல் செய்து வந்தால்தாங்'க நாடு உருப்படும்; நாமும் உருப்படுவோம். இல்லிங்'களா?" என்று தொடர்ந்தார் பெரியவர். தொடர்ந்து அவர் கேட்ட கேள்விகளுக்கு விடை தரும்போது, நான் திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த நான்குநேரியைச் சார்ந்தவன் என்பதையும், வைணவ அந்தணர் குடும்பத்தைச் சார்ந்தவன் என்பதையும் கூறும்படியாயிற்று.

"பெரியவரே! முடவன் வாய்க்கால் என்று இந்த வாய்க்காலுக்கு ஏன் பெயர் வழங்குகின்றது. சொல்லலாமா?" என்றேன். என் ஆவல் என் சொற்களில் விரைந்து வெளிப்பட்டதை அவர் புரிந்திருக்கக் கூடும்.

"தம்பி! அது ஒரு சுவையான வரலாறுங்'க. உங்களைப் போல இருக்கிறவங்க தெரிஞ்சுக்க வேண்டியதுதான்" என்ற முன்னுரையோடு தொடங்கினர். அவர் கூறிமுடித்ததை நான் அவருடைய கொச்சைச் சொல் கலந்த கிராம நடையிலிருந்து நீங்கிச் சுருக்கமாகக் கூறிவிடுகிறேன். * * *

வைத்தீசுவரன் கோயிலை அடுத்துள்ள கிராமங்களில் 'பள்ளவெளி' ஒரு சின்னஞ்சிறிய ஊர். நான்கு ஐந்து கல் தொலைவுதென்புறமாக உள்ள அவ்வூரில் குறைந்தது இருநூறு வருஷங்களுக்குக் குறையாத பழைய குடும்பங்களில் ஒன்று சின்னப்பண்ணை சங்கரம் பிள்ளை வீடு. சங்கரம் பிள்ளை செல் வாக்குமிகுந்தவர். நாட்டை ஆண்டுவந்த வெள்ளைக்காரர்களிடம் மிகவும் மரியாதையும் மதிப்பும் உடையவர். மேல்நாட்டு நாகரிக மோகம் கொஞ்சம் அதிகம். கிருத்திகை தோறும் இலட்சம் இலட்ச மாகவரும் மக்கள் கடவுள் நம்பிக்கையில் ஆழ்ந்த பிடிப்பு உடை யவர்தான். பட்டணம் போய் பட்டப் படிப்பு முடித்து வந்த பிறகு அவருடைய போக்கே மாறிவிட்டது. கட்டுக் குடுமி பறந்து விட்டது; கிராப் செய்துகொண்டார். கண்டித்த தந்தையார்க்கு அறிவுரை கூறிப் புதிய உலகத்தின் போக்கை இயம்பி அவரையும் தம்வழிப்படுத்தப் பிரசாரம் செய்யத் தொடங்கிவிட்டார். 'மூர்க் கனும் முதலையும் கொண்டது விடா' என்பது உணர்ந்த தந்தையாரும் வாயை மூடிக்கொண்டார்.

சங்கரனின் அறிவு வாதம் தடையின்றி வளர்ந்தது மாதக் கிருத்திகை தோறும் தவறுமல் செல்லும் உள்ளூர் அன்பர்களை மனம் நோகப் பேசினர். 'கடவுளாவது ஒன்ருவது. மனித னின் கற்பனைதான் எல்லாம்' என்று அச்சிட்ட இதழ்களை வேளூர்க்குச் சென்று அன்பர் கூட்டத்திடையிலே வழங்கினர். நண்பர் கூட்டம் ஒன்றும் அவரைச் சுற்றித் துதிபாடிக் கொண் டிருந்தது. பக்தர்கள் மனம் நாளுக்குநாள் புண்ணுகிக் கொண் டிருந்தது. 'எல்லாம் வல்ல செல்வமுத்துக்குமரன்தான் இப் பிள்ளையைத் திருத்த வேண்டும்' என்று நினைத்துத் தம் போக்கில் சென்று வந்தார்கள்.

ஊரை ஒட்டி ஓடிக் கொண்டிருந்த வாய்க்கால் கரையில் ஒரு பிள்ளையார் கோயில்; படர்ந்து விரிந்த அரசமரம். அத னுடைய வேரோடிய கரை. ஊரில் உள்ள மிக வயதான முதிய வர்கள் - கிருத்திகையன்று வேளூர்க்கு நடந்துபோக முடியாத வர்கள் அன்று காலை, ஊரில் வாய்க்கால் துறையில் முழுகிப் பிள்ளையார்க்குத் தேங்காய் உடைத்து வழிபாடு செய்து வீடு திரும்புவார்கள்.

அன்றும் அப்படித்தான். கிருத்திகை வழிபாடு செய்து கொண்டிருந்தார்கள் வயதான சில பெரியவர்கள். சங்கரனும் நண்பர்களும், அரசமரத்தின் உயர்ந்த கிளைகளில் ஏறி அமர்ந்து கொண்டு எக்காளமிட்டுச் சிரித்துப் பேசி, அச்சிட்ட அறிக்கை

களைக் குளிக்கவருவோர் மீது வீசிக்கொடுமை செய்து கொண்டிருந்த வேளை. உச்சிவேளை. 'இந்நேரம் வைத்தீசுவரன் கோயிலில் பெருமானுக்குச் சந்தனபிஷேகம் நடந்துகொண்டிருக்கும்' என்ற புனிதநினைவில் மூழ்கியபடி வழிபாடாற்றிக் கொண்டிருந்தனர் முதியவர்கள். அப்போதுதான் அது நிகழ்ந்தது."

என்று நிறுத்தினர் பெரியவர். இக்காலப் பத்திரிகைகளில்' தொடர்கதைகளில்' ஆர்வம் தூண்டப்பட்ட இடத்தில் 'தொடரும்' என்று போட்டுவிடும் வழக்கம் எனக்கு நினைவில் வந்தது. 'என்ன அப்படி நடந்தது' என்று பரபரப்புடன் கேட்டேன்.

ஒரு சூறைக்காற்று பலமாக வீசியது. பெருங்காற்று; பேய்க்காற்று. 'முருகா முருகா' என்று கூறியபடி வானை அண்ணாந்து நோக்கினர் பக்தர்கள்.

சங்கரன் ஏறியிருந்த அரசமரத்தின் பெருங்கிளை மடமட வென்று முறிந்து வாய்க்காலிலும் கரையிலுமாக 'ஓ' வென்ற இரைச்சலுடன் விழுந்தது. அலறியபடியே விழுந்து கிளைகளிலும் தண்ணீரிலும் சிக்கித் தவித்தனர் சங்கரன், நண்பர்கள்.

அப்புறம் நடந்ததை விவரிப்பானேன். நண்பர்கள் எல்லாம் தப்பிவிட்டார்கள். சங்கரனைப் பட்டணத்து மருத்துவமனைக்கு எடுத்துச் செல்லும்படி ஆகிவிட்டது. அங்குச் சென்ற ஆறு மாதங்களுக்குப் பிறகு ஒன்றரைக் காலுடன் திரும்பினன் சங்கரன். ஆம்; தொடைக் கீழ்வரை முறிவு ஏற்பட்டுக் காலை எடுக்கும்படியாய்விட்டது.

வந்த சில மாதங்களுக்குள் பெரியவர் கண்ணை மூடிவிட்டார். மரணத் தறுவாயில் தம் மகன் கடவுட் குற்றத்தால்தான் தண்டனை அடைந்தான் என்ற உணர்வோடு கண்ணைமூடினர். தான் பெற்ற தண்டனையும் தந்தையாரின் பிரிவும் சங்கரனின் விழிகளைத் திறந்துவிட்டன.

ஊரில் அரசமரத்துப் படித்துறையும், பிள்ளையார் கோயிலும் புதிதாகத் திருப்பணி செய்யப்பட்டன. சிறுகச் சிறுகப் பண்ணையாரின் சொத்துக்கள் கடனில் மூழ்கின. ஊர்க்கு வெளியே சத்திரம் ஒன்றில் சங்கரன் குடியிருக்க வேண்டிய நிலையும் வந்தது. கட்டைகளை ஊன்றிக் கொண்டு நாள்தோறும் வாய்க்கால் கரைப் பிள்ளையாரை வந்து கும்பிடவோ, நான்கு மைல்களையும் கிருத்திகையன்று பக்தியோடு சிரமத்துடன் நடந்து

வைத்தீசுவரன்கோயிலுக்கு வந்து வழிபட்டு மீளவோ சங்கரம் பிள்ளை தவறவில்லை.

தம் வாழ்நாளில் கடைசியில் சில மாதங்கள் வாய்க்கால் கரைப் பிள்ளையார் கோயிலிலேயே கிடந்தார் சங்கரன். அவரது வாழ்நாள், ஓர்நாள் இளங் காலையில் அங்கேயே முடிந்து விட்டது. அவர் மறைந்து விட்டாலும். அவருடைய நினைவில், 'முடவன் வாய்க்கால்' என்று அந்த வாய்க்காலை இளந்தலை முறை சொல்லிவரும் வழக்கம் மாறவில்லை."

பெரியவர் முடித்துவிட்டு எழுந்தார். நிலா வானில் எழுந்து ஒளியை வழங்கியது. மீண்டும் ஒருமுறை சிமிட்டிப் பலகையை நோக்கி விட்டு ஊர்ப்புறமாக நோக்கினேன். 'தம்பி வரட்டுங்களா?' என்று எதிர்ப்புறமாக நடந்தார் பெரியவர். என் நினைவில் சங்கரம் பிள்ளையும், வாய்க்கால்கரைப் பிள்ளையார் கோயிலும் சுழலக் கண்டேன்.

தொலைவில் தெரிந்தது கோபுர விளக்கு. இப்போது என் நடையில் புதிய தென்பும் உற்சாகமும் தோன்றியிருந்தன.

---

EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Vaithianathaswami Devasthanam, Vaithiswarankoil.

I wish to express my grateful thanks to you and your temple staff for having extended a waram welcome the other day when we had been to your temple to have the Darsanam of Lord Vaitheeswarar. The Guest House people attended on us in a very pleasing manner. Because of your efficiency and organisational capacity The temple has been maintained very well and we are indeed very much pleased to notice the same. Thanking you once again.

Yours faithfully

Mrs. T. Savithri, B. A., B. T.

18—5—1972. T. Nagar, Madras-17.

# " கொழிதமிழ்க் கூடலில் கொன்றை வேணியான் "

வித்துவான். திருமதி. ப. நீலா

( மலர் 31, இதழ் 8, பக்கம் 465 இன் தொடர்ச்சி )

## 52. தருமிக்குப் பொற்கிழி அளித்தது (2)

சோலையின் நடுவில் செண்பக மாறனின் அருகில் பூத்த மலர்க்கொடிபோல் அரசி வீற்றிருந்தாள். மேனி மாந்தளிராகவும், தனங்கள் கோங்கரும்பாகவும், கை காந்தளம் பூவாகவும் இருக்கும் அரசமாதேவி செங்கமலமும், ஆம்பலும், சண்பகமும், கழுநீரும் பூத்த கொடிபோலிருந்தாள். அப்போது மிகுந்த மணத்தோடு தென்றலும் வீசியது.

### கவிதை பிறக்கக் கருபிறந்தது :

வெவ்விய வேலான் வீசுங்காற்றை முகர்ந்தான். இதுவரை அறியாத புதுமை மணம் அதிலிருக்கக்கண்டான்.; இது காற்று சோலையில் - தடாகத்தில் கவர்ந்த மணமில்லை. காற்றுக்கும் வாசனை கிடையாது. இப்படி எண்ணிக்கொண்டு திரும்பி தன் தேவியை நோக்கினன். அது அவளுடைய அழகான கூந்தலின் மணமாயிருக்கக் கண்டு அதிசயித்தான். இம்மணம் இக்கூந்தலின் இயல்போ செயற்கையோ என்று ஐயுற்று தான்ஐயுறும் கருத்தை யாவரேனும் பாடலாகச் செய்தால் அவர்க்கு ஆயிரம் செம்பொன்பரிசு தரப்படும் என்று புலவர்முன் அறிவித்தான். செம்பொற்கிழி அவைக்குமுன் தூக்கிக் கட்டப்பட்டது.

சங்கப்புலவர் ஒருவருக்கும் அரசனது எண்ணம் புலப்படவில்லை; செய்வதறியாதும் ஒருவருக்கொருவர் சொல்லுவதறியாதும் திகைத்து நின்றார்கள்.

### தருமிக்குக் காட்டிய தயவு :

அந்த நேரத்தில் ஆதிசைவ குலத்தில் வந்த தருமியென்ற பிரமச்சாரி ஆலவாய் இறைவனிடம் வேண்டுகிறான். ' எந்தையே

தந்தை தாயில்லாத தனியனாகிய அடியேன் மணஞ்செய்து கொள்ள ஆசைப்படுகிறேன். இல்லறத்தில் இருக்கும் ஒருவனால் மட்டுமே உன்னைத் தொட்டுப் பூசிக்க முடியும். உனக்குப் பணி செய்ய நான் மணக்க வேண்டும்; அதற்குப் பொருள் வேண்டுமே! ஏழைக்கு நீ அருளினால் தான் உண்டு. எல்லாம் அறிந்த உனக்குத் தென்னவனின் மனக்கருத்தும் தெரியுமல்லவா! அக்கருத்தறிந்து எனக்கொரு கவிதையை அருள்க' என்று வேண்டினான் தருமி.

தென்னவன், குலதெய்வமாகிய சோமசுந்தரப்பெருமான் 'கொங்குதேர் வாழ்க்கை' என்று தொடங்கும் பாடலையெழுதித் தருமியிடம் தந்து மறைந்தான். அப்பாடலும் அதன் பொருளும் வருமாறு :

"கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமம் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியல்
செறியெயிற் றரிவை கூந்தலின்
நறியவு முளவோ நீ யறியும் பூவே"

ஏ! அழகான சிறகுகளைக்கொண்ட வண்டே! நான் உன்னை யொன்று கேட்பேன் - எனக்காகக் கூறாமல் நீயறிந்த உண்மையைக் கூறவேண்டும். மயில்போன்ற சாயலையும் செறிந்த பற்களையுமுடைய இவ்வரிவை கூந்தலினும் மணம்வீசும் மலர்களை நீ எங்காவது அறிந்ததுண்டா?

## கற்ற நாவலர் கருத்திலேற்றனர் :

பொற்றனிச்சடைப் புவனநாயகன் தந்த பாடலைக் கைக்கொண்டு பழையநிதி பெற்றான்போல் உளங்களித்து கற்ற நாவலர் கழகம் நண்ணினான். கல்வியாளர்முன் தான் கொண்டு சென்றஓலையைக் காட்டினான் தருமி. சொற்பொருள் நயஞ்சிறந்த அந்தப் பாடலை அனைவரும் போற்றினர். அரசனிடம் சென்று பாடலைக்கூறி பரிசிற்குகந்த தென்றார்கள். செண்பகமாறன் தன்னுள்ளமே பிரதிபலிக்கும் பாடலை உளமாரப் பாராட்டிப் பரிசைத் தருமிக்கே தருக என்று உத்திரவிட்டான்.

## கற்றவர் கருத்தை விலக்கிய கீரன் :

அவைப் புறம்பே தொங்கிய பொற்கிழியைத் தருமி அறுக்க முற்பட்டபோது, கீரன் நேர்ந்து 'நில்' என விலக்கினான்.

கலத்துணவை நெடுங்காலம் பசியால் வாடியவன் உண்ண எடுத்தபோது கையைப் பற்றினல் எப்படி வருந்துவானே அப்படி தருமி வாடினன். அவனுள்ளம் அழுதது. கொண்டு வந்த செய்யுளைக் கோயிலில் வைத்து 'மையுண்ட கண்டனே வழுவான பாடலை என்னிடம் தந்தது ஏனே! என்று கேட்டு வருந்தி நின்ருன். வறுமைநோய் பிணிப்பப் பன்னுள் வழிபடும் அடியேன் நின்பால் பெறுபொருள் இழந்தேனென்று குறைகூற வில்லை. யாவர்க்கும்மேலான இறைவனே! நின் கவிக்குக் குற்றம் சில்வாழ்நாளும் சிற்றறிவுமுடைப் புலவன் கூறினனென் ருல் உன்னை யார் மதிப்பார். எந்தையே இவ்விகழ்ச்சி நினைக்கே தவிர எனக்கில்லை என்று சிந்தை நொந்து கூறிய தருமியின் முன்பு சுந்தரவிடங்கன் ஆங்கோர் புலவனுய்த் தோற்றம் தந்தான்.

## சுந்தரப்புலவன் வந்தான் :

கண்டிகை மதாணி பூண்டு, வயிரமிழைத்த குண்டலம் காது களிலாட, தண்டமிழ் மூன்றும் வல்லோன் என்பதை நெற்றியில் பூசிய திருநீறு காட்ட, இளைஞர்கள் தொழுது வாழ்த்த வந்தான். அவனைச் சூழ்ந்து வந்தாரில் குடைபிடிப்போரும் அடைப்பை தாங்குவோரும் களாஞ்சி ஏந்துவோரும் சாமரம் வீசுவோரும் இருந்தார்கள். சொல்லின் வரம்பிற்கு எட்டாத திருவடிகளில் வேதமே பாதுகையாய் அமைந்தது. இந்தத் திருக்கோலத் துடன் கழகத்துள் நுழைந்தான்.

இங்கு, யார் நம் கவிக்குக் குற்றம் கூறியது என்று கேட்ட சுந்தரப்புலவன் முன். கீரன் அஞ்சாது தோன்றினன். சொற் குற்றமில்லை பொருட்குற்றங்கண்டு தடுத்தேன் என்ற கீரனிடம் என்ன பொருட்குற்றம் கண்டாய் என்று புலவன் கேட்டான். அல்லொத்த குழற்கு புனைமலர்ச் சார்பாலன்றி நாற்றம் இயற் கையில் இல்லையே என்பது கீரனின் வாதம். வந்த புலவன் வாதத்தைத் தொடர்டவாகி மாதருள் சிறந்த பதும சாதியார் கூந்தலுக்கோ என்று வினவ, அம்மகளிர் மந்தார மலர்களைச் சூடிக்கொள்வார்கள், அதனல் மணம்பெறும் அவர்கள் கூந்தல் என்ருன். நீ தினமும் பரவி வழிபட்டேத்தும் ஞானப்பூங்கோதை யின் கூந்தலும் அன்னதேயோ என்ருன் புலவன். 'அதுவும் அற்றே' என்று சாதித்தான் நக்கீரன். தன்னை யார் என்று உணரட்டும் என்று இறைவன் நெற்றிக்கண்ணைச் சிறிதே காட்ட அதற்கும் அஞ்சாத கீரன், நீர் நெற்றியில் மட்டுமல்ல- உம்பரார் பதிபோல ஆக முற்றுங் கண்ணைக் காட்டினலும் நும்

பாடலின் குற்றம் குற்றமே என்று தடுமாற்றமின்றிக்கூறினன் – தன் குற்றம் உணராதகீரன்.

சோமசுந்தரப்பெருமானின் நெற்றி விழியிலிருந்து வந்த நெருப்பின் வெம்மை கீரனின் உடம்பு முழுமையுமாகப் பற்றிக் கொண்டது. அவ்வெப்பம் பொறுக்கலாற்ருது பொற்ருமரைத் தடாகத்துள் விழுந்தான் கீரன். சோதிக்கவந்த சோதிநிலா முடியனும் தன் திருவுருக் கரந்து சென்ருன்.

(வளரும்)

---

## பார்வையாளர் குறிப்பு நகல்

### தருமபுரம் ஆதீனம்

### ஸ்ரீ கம்பஹரேஸ்வரசுவாமி தேவஸ்தானம், திருபுவனம்.

இன்று திருவிடைமருதூர் திருமுறை மகாநாட்டுக்கு வந்த நாங்கள் திருபுவனம் வந்து சிவபெருமானையும் இக்கோவிலில் சிறப்பாக சரபேசரையும் கும்பிட்டுப் பேறுபெற்ருேம். கோவிலில் பணியாளர்கள் மிக்க அன்புடன் நடந்துகொண்டார்கள். கோவிலை நிர்வகித்துவரும் தருமபுரம் மகாசந்நிதானத்துக்கு வணக்கம் செலுத்தி நற்பணி புரியும் அனைவருக்கும் வாழ்த்து கூறுகின்ருேம்.

(Sd.) ராய. சொக்கலிங்கம்,
,, பெரி. ரா. சு. தேவராஜன் செட்டியார்,
,, ராம. அழ. ராம. ராமனுதன் செட்டியார்.

Sri Vaithianathaswami Devasthanam, Vaithiswarankoil.

It is with great respect and previlige that I have been treated with by the Trustees I am ever gratful to them I wish them all the best in there endevour.

With sincere respects and regards
1972. M. A. M Ramaswamy
Sherriff of Madras

# திருமந்திரம் - மூலமும் உரையும்

திருக்குறள்வேள்,

திரு. ஜி. வரதராஜப் பிள்ளை B. A.,

(மலர் 31. இதழ் 8. பக்கம் 451 இன் தொடர்ச்சி)

258 தன்னை அறியாது தானல என்னுதிங்
கின்மை அறியா திளையரென் றோராது
வன்மையில் வந்திடுங் கூற்றம் வருமுன்னந்
தன்மையின் நல்ல தவஞ்செய்யும் நீரே.

வன்மையில் வந்திடும் கூற்றம் - சர்வ வல்லமையுடன் உயிரை உடலினின்றும் பிரிக்கும் காலன், தன்னை அறியாது - உன்னுடைய நிலைமை அறியாது. தான் நல்லன் என்னுது - நீ நல்லவன் என்றும் கருதாது. இங்கு இன்மை அறியாது - இங்கு உனக்கு உற்ற வறுமையையும் உணராது. இளையர் என்று ஓராது - நீ வயதில் இளையவன் என்று கருதிவிடாது. ஆதலால்; வருமுன்னம் தன்மையின் நல்ல தவம் செய்யும் நீரே - காலன் வந்து உயிரைக்கொண்டு போவதற்குமுன் உடலை நிலைபேருகச் செய்யும் நல்ல தவத்தினைச் செய்யும்.

கூற்றன் - உயிரை உடலின்றும் வேறுபடுத்தலின் கூற்றன்.

காலன் வருவதற்குமுன் நல்ல தவத்தினைச் செய்ய வேண்டும். 5

256 துறந்தான் வழிமுதற் சுற்றமும் இல்லை
இறந்தான் வழிமுதல் இன்பமும் இல்லை
மறந்தான் வழிமுதல் வந்திலன் ஈசன்
அறந்தான் அறியும் அளவறி யாரே.

துறந்தான் வழிமுதல் சுற்றமும் இல்லை - துறந்தோர்க்கு இவ்வுலகில் எவ்வித உறவும் இல்லை. இறந்தான் வழிமுதல் இன்பமும் இல்லை - இறந்தவர்க்கு இவ்வுலகப் பொருள்களினுல் எவ்வித இன்பமும் இல்லை. மறந்தான் வழிமுதல் வந்திலன்

ஈசன் - இம்மையில் அறம் செய்யாது மறந்தவர்க்கு வழித்துணை யாக ஈசன் வருவதில்லை. அறந்தான் அறியும் அளவு அறியாரே- இம்முத்திறத்தினரும் அறத்தினைச் செய்யும் முறையை அறிய மாட்டார்.

அறமே துணையென்று கருதி மறவாது செய்தல் வேண்டும். 6

257 தான்தவஞ் செய்வதாஞ் செய்தவத் தவ்வழி
மான்தெய்வ மாக மதிக்கும் மனிதர்கள்
ஊன்தெய்வ மாக உயிர்க்கின்ற பல்லுயிர்
நான்தெய்வ மென்று நமன்வரு வானே.

மான் தெய்வமாக மதிக்கும் மனிதர்கள் - அறிவையே தெய்வ மாகக் கருதும் மனிதர்கள். செய்தவத்து அவ்வழி தான் தவம் செய்வதாம் - முற்பிறப்பில் செய்த தவத்தின் வழி தாம் தவம் செய்து மேன்மை அடைவர். ஊன் தெய்வமாக உயிர்க்கின்ற பல்லுயிர் - உடம்பே தெய்வமென்று கருதி உயிர் வாழ்கின்ற உயிர்க் கூட்டம். நான் தெய்வம் என்று நமன் வருவானே - நான் தெய்வம் என்று இயமன் வருவதை அறியாது அழிவர்.

'' தவமும் தவமுடையார்க்காகும் '' ஆதலின், '' செய்தவத்தவ் வழி '' என்றார். மான் - புத்திமான். உயிர்க்கின்ற பல்லுயிர்' என்று அறம் செய்யாதாரின் இழிவைக் குறித்தார்.

உடம்பைப் பெரிதெனப் பேணி அறம் செய்யாதவர் அழிவர்.

258 திளைக்கும் வினைக்கடல் தீர்வுறு தோணி
இளைப்பினை நீக்கும் இருவழி உண்டு
கிளைக்குந் தனக்கும்அக் கேடில் புகழோன்
விளைக்குந் தவம்அறம் மேற்றுணை யாமே.

திளைக்கும் வினைக்கடல் தீர்வுறுதோணி - நம்மை ஆழ்த்து கின்ற வினையாகிய கடலில் இருந்து கரை ஏறுவதற்குரிய தோணியாக. கிளைக்கும் தனக்கும் இளைப்பினை நீக்கும் இருவழி உண்டு - நமக்கும் நமது சுற்றத்தார்க்கும் களைப்பினைப் போக்கிக் காக்கும் இரு வழிகள் உள்ளன. கேடில் புகழோன் விளைக்கும் தவம் அறம் - அவை அழியாப் புகழினையுடைய சிவத்தினைப்பற்றி நின்று ஆற்றப்பெறும் தவம் ஒன்று; இல்வாழ்க்கைபற்றி நின்று செய்யும் அறம் மற்றொன்று. மேல் துணையாமே - இவையே மறுமைக்குத் துணையாவன.

தோணி - கடலைக் கடப்பதற்குரிய ஓடம். இங்கு அறமும் தவமும் ஆகும். முத்திக்குரியவழி அறமும் தவமும் ஆகும். 8

259 பற்றது வாயநின்ற பற்றினைப் பார்மிசை
அற்றம் உரையான் அறநெறிக் கல்லது
உற்றுங்க ளால்ஒன் றும் ஈந்தது வேதுணை
மற்றண்ணல் வைத்த வழிகொள்ளு மாறே.

பற்று அதுவாய் நின்ற பற்றினை - பற்றுக்கோடு அதுவே யாய் நின்ற மெய்ப்பொருளை. பார்மிசை அற்றம் உரையான் - உலகில் குறை கூறுதவனாய். அறநெறிக்கு அல்லது உற்று - அறநெறி அல்லது பிறநெறியிற் செல்லாது பொருந்தி. உங்களால் ஒன்றும் ஈந்த அதுவே துணை - உங்களால் பிறருக்குக் கொடுத்த ஒன்றுமே துணையாகும். மற்று அண்ணல் வைத்த வழி கொள்ளும் ஆறே - அதுவே சிவம் வைத்த முத்தி அடைவதற்குரிய வழியுமாகும்.

அது - சிவம். அற்றம் - குறைவு.

சிவனைப் பற்றிநின்று அற்றார்க்கு ஒன்று ஈவதே முத்தி நெறியாம். 9

(தொடரும்)

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Sattanathaswamy Devasthanam, Sirkali.

"Visited the Sri Sattanathaswami Temple today and I am happy to record that the Supdt. Thiru Sourirajan has taken great interest in keeping the temple very clean without in any way sacrificing the religious aspect."

(Sd.) C. M. Alagarswamy
Secy. to Govt. of Tamil Nadu,
Legislative Council, Madras.

14—5—72.

# திருவையாற்றுப் பதிற்றுப்பத்தந்தாதி

## மூலமும் – உரையும்

உரையாசிரியர் :-

பண்டித வித்துவான், தருமையாதீனத் தமிழ்ப்புலவர்,

**திரு. இராம. கோவிந்தசாமிப் பிள்ளை**

( மலர் 31. இதழ் 8. பக்கம் 455 இன் தொடர்ச்சி )

குறைவி லாதவன் அருணிறை காவிரி
குடைந்துமெய் யன்பாக
அறையி லாவன மன்மன முடைய
மெய்யடியா ரொடுகூடி
மறையெ லாம்புகழ் திருவையாற் றீசனை
வணங்கிநெக் குருகாயேல்
முறையி லாத்துயர் எய்திடு நெஞ்சமே
முத்தியும் அரிதாமே. 42

(இ - ள்) நெஞ்சமே - என்றெடும் பற்றுது பயனற்ற பொருளில் பற்றுதலைச் செய்கின்ற மனமே! அருள்நிறை குறைவு இலாதவன் - கருணைமிக்க நிறைபரிபூரணனும், மறை எல்லாம் புகழ் திருவையாற்று ஈசனை : அனைத்து வேதங்களாலும் பரவப் பெறும் திருவையாற்றில் கோயில்கொண்டருள்பவனும் ஆகிய தலைவனை, காவிரி குடைந்து - காவிரியாகிய புனிதநதியின்கண் நீராடி, மெய் அன்பு ஆக - உண்மை அன்பு வரவும், அறையில் ஆவன மன்ன - மனமாகிய அறையின்கண் நல்லனவாகிய எண்ணங்கள் நிலைபெறவும்; மனம் உடைமெய் அன்பரொடு கூடி- மனம் பற்றுதலை யுடைய உண்மைத் தொண்டரொடும் ( கூடி ) சேர்ந்து, வணங்கி - முறையொடும் வழிபாடாற்றி, நெக்கு உருகாய் ஏல் - மனமிளகி நெக்கு விட்டு இளகி யிரங்காதிருப் பாயே யானால், முறையிலா (த) துயர் எய்திடும் - முறைமை சிறிதும் இல்லாத பல துன்பங்களும் பல்கிவந்திடும். முத்தியும் அரிது ஆம் - முடிவில் முத்திப்பேறுங் கிட்டாது. (எ - று)

(கு - ரை) நெஞ்சறிவுறுத்துவது இப்பாடல். குறைவு இலா நிறைவே கோதிலா அமுதே, என்பது திருமுறை. காவுக்காக (இந்திரன் நந்தன வனத்திற்காக) விரிந்தமையின், காவிரி

யெனப் பெயர் போந்தது, காவேர முனிவரின் புதல்வியெனவும் காவேரி எனவும் பெயர்பெறும். பொன்னி, காவிரி, காவேரி என்பன இவ்வியாற்றின் பெயராம்,

"களித்துக் கலந்ததொர் காதற்கசி வொடு காவிரிவாய்க்
குளித்துத் தொழுது முன்னின்ற விப்பத்தரைக் கோதில்
தெளித்துச் சுவையமு தூட்டி யமரர்கள் சூழிருப்ப [செந்தேன்
அளித்துப் பெருஞ் செல்வமாக்குமையாறன் அடித்தலமே"

என்பது அப்பர்தேவாரம். அடியவர் - (சந்ததியார்) திருவடிகளையே பற்றிப் போற்றுமவர். முறையிலாத்துயர் - பழவினையின்றி வருந்துன்பங்கள். முத்தி - விடுபடல். மறைகள் - நான் மறைகள். வேதங்கள். மன்னுவென்பது மனவென இடைக்குறை; நிலைபெற என்பது பொருள்.

**அரிய மக்களைப் பெண்டிரைக் கிளைஞரை**
**யன்புடைப் பெருவாழ்வை**
**உரிய செம்பொருள் ஆதியை நிலையென**
**வுழன்றனை வனமாலைக்**
**கரிய மாற்கெழில் ஆழியன் றருளிய**
**கடவுளை மலர்க்கொன்றை**
**தெரியல் மேனியை யாறனை மறந்தனை**
**தெருள்வ தெவ்வண நெஞ்சே 43**

நெஞ்சே - மனமே, அரிய மக்களை (அரிய) பெண்டிரை, (அரிய) கிளைஞரை - பெறற்கு அரிய தவமுடைய பிள்ளைகளையும், பூர்வ புண்ணியத்தாற் பெற்ற அருமையான மனைவியரையும், கிடைத்தற்கு அரிய நல்ல சுற்றத்தினரையும், அன்பு உடை பெரு வாழ்வை - அன்பொடு பொருந்திய பெரிய வாழ்க்கையின் நலத்தையும், உரிய செம்பொருள் - தனக்கேயுரிய நேரிய நெறியில் வந்த நன் பொருளையும், ஆதியை - முதலாக உடையவற்றினை, நிலைஎன - என்றுமழியாமல் நிலைத்திருப்பன வென்று (கருதி) உழன்றனை - வருந்தியுள்ளாய், அதனிடைப்பட்டுக் கலங்கினை, வனமாலை கரியமாற்கு எழில் ஆழி அருளியகடவுளை - திருத்துழாய் அலங்கல் அணிந்தநீல நிறமுடைய திருமாலினுக்குச் சலந்தரனைத் தடிந்த எழுச்சியுடைய சுதரிசனமெனப் பெயரிய சக்ராயுதப்படையினை அளித்தருளிய பரம்பொருளை, மலர் கொன்றை தெரியல்வேணி ஐயாறனை - கொன்றைப்பூமாலையினை யணிந்த சடாமகுடத்தை யுடைய திரு ஐயாற்றுப் பரமேசுவரனை (மனமே) மறந்தனை - அறவே நினைத்தலை விட்டுவிட்டாய்,

எவ்வ (ண்) ணம் தெருள்வது - எப்படித் தெளிவு அடைவது. கூறுவாயாக. (எ - று)

(கு - ரை) இஃது நெஞ்சு அறிவுறுப்பது, மனமே நீ நிலையற்ற பொருள்களை நிலையுற்ற பொருளாக் கருதி வாளா உழல்கின்றனை, இனி மேலாயினும் அவற்றின் உண்மைக்கூற்றினை (தன்மையை) உள்ளவாறறிந்து நிலையுடைப் பரம்பொருளுக்கு ஆட்பட்டு பேரின்புறுவாயாக, எனக் கூறியதாகும். வனமாலை - துளசி. தெரியல் - தேர்ந்து தொடுக்கப்பெறும் மாலை. தெருள் - தெளிவு. நில்லாதவற்றை நிலையின வென்றுணரும். புல்லறிவான்மை கடை, எனுங் குறட்பாக்களைகுறித்துணரற்பாலதாம்.

நெஞ்ச மேயுனைப் புகழ்ந்தியான் பொறிகளின்
நெறிசெலா திருந்தென்றும்
அஞ்சல் நீயெனக் காக்குமை யாற்றர
னந்தகன் உரங்கீண்ட
செஞ்ச ரோருக மலரடி துதியெனச்
செப்புவ துணராமல்
வஞ்ச மாதிய புரிந்தனை காத்திட
மற்றெரு தேவுண்டோ! 44

(இ - ள்) நெஞ்சே, ஏ. மனமே, என்றும் - எக்காலத்திலும், அஞ்சல் நீ என - அபய கரங்கொண்டு நீ அஞ்சுதலைப் பரிகரி என்று, காக்கும் - காத்தருள்புரியும், ஐயாற்று அரன் அடி- திருவையாறெனும் பெரும் திருப்பதியில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் சிவபெருமானுடைய திருவடி, அந்தகன் உரம் கீண்ட, செம்சரோருகம் ( அடி ) தென்றிசைக் கோனாகிய இயமனுடைய மார்பினைப் பிளந்து உயிரைப் போக்கிய செவந்த தாமரையாகிய திருவடிகளை, பொறிகளின் நெறி செலாது இருந்து துதி புரி - இந்திரியங்களின் வாயிலாகச் செல்லும் புலநெறியில் செல்லாது வாளா இருந்து தோத்திரம் செய்வாயாக, என செப்புவது உணராமல் - என்று உனைப் புகழ்ந்து கூறுவது அறியாமல், வஞ்சம் ஆதிய புரிந்தனை - கரவு ஒழுக்க முதலிய வற்றினைச் செய்கின்றாய், காத்திட - பிறவிப் பெருங்கடலில் நீ விழாதபடிக் காப்பதற்கு, மற்று ஒரு தேஉண்டோ? - வேறொரு கடவுள் உண்டோ கூறுவாயாக. (எ-று)

(கு - ரை ) நெஞ்சொடு கிளத்தலாம் இச்செய்யுள். எல்லாம் இறைவன்றன் திருப்பெயர்களில் ஒன்று. காலாரி (காலாந்தகன் என்பதாம்.

" பாலனுக் காயன்று பாற்கடலீந்து பணைத்தெழுந்தே
ஆலினிற் கீழிருந்து ஆரண மோதி யருமுனிக்காய்ச்
சூலமும் பாசமுங் கொண்டு தொடர்ந்து அடர்ந்து ஓடிவந்த
காலனைக் காய்ந்தபிரான் கடவூருறை யுத்தமனே."

எனும் அப்பர் அருள்வாக்கும் வலியுறுத்தும்.

'என்றும் அஞ்சல் நீ எனக் காக்கும் என்பது' 'அஞ்சேல் என்று அருள் செய்வான் அமருங் கோயில்' என்ற ஞானசம் பந்தர் திருவாக்கை வற்புறுத்தி நிற்கும். அந்தகன் - இயமன்' சரோருகம் - தாமரை, புரிதல் - செய்தல், தே - கடவுள், (தெய்வம் சோதிவடிவானது). திருவையாறகலாத செம்பொற்சோதி யாகலின் தேவுண்டோ என்றார். காத்தல் - இறைவர்நெறியில் ஈடுபடுத்துவது, முத்திப்பேறுறுமாறு புரிவது, ஓகாரம் - வினைப் பொருளது.

ஒருங்கி நெஞ்சமே யரன்றிரு வடித்துணை
யுள்ளவர்க் கல்லான்மற் (று)
இருங்க டாவினிற் பாசமுந் தண்டமும்
ஏந்திவந்து இருங்கூற்றம்
நெருங்கு போதினிற் றடுப்பரீ திஃதெலா
நீயுமோர்ந் தையாற்றுப்
பிருங்க மார்தொடை வேணியான் சரண்புகிற்
பெருஞ்சுக மடைவாயே 45

(இ - ள்) அரன் திரு அடிதுணை உள்ளவர்க்கு அல்லால்- சிவபெருமான் திருவடிகளை உற்ற பற்றுக்கோடாக உடையவ ருக்கு (அல்லாமல்) ஏனையருக்குத் தொடுக்கமாட்டார். கூற்றம் - உடல் வேறு உயிர் வேறாகப் பிரிக்கும் வன்மையுடைய இயம னைவன், இரும் கடாவினில் (ஏறி) பெரிய எருமைக்கிடாவினில் ஏறிக்கொண்டுவந்து, பாசமும் தண்டமும் ஏந்தி வந்து - பாச மாகிய எமக்கயிற்றினையும் எமதண்டத்தையும் தாங்கிவந்து துயருறச்செய்யும், போதினில் - சமயத்தில், தடுப்பர் - அப்பரமே சுரனை மார்க்கண்டனைக் காத்ததுபோற் தடுத்து ஆட்கொள்வர், ஈது அல்லால் - இதுவல்லாமல் மற்றையர்க்குத் தடுப்பதற்கு வந்தருள மாட்டார். நெஞ்சமே - மனமே. நீ, இஃது எல்லாம் நீயும் ஓர்ந்து - இஃது அனைத்தினையும் நன்குணர்ந்து, ஒருங்கி - ஒன்றுபட்டிருந்து, ஐயாற்று - திருவையாற்றின்கண் எழுந்தருளி யுள்ள (காலாரி யெனும் பெயருடைய) பிருங்கம் ஆர் - வண்டு கள் தேனினை அருந்தும், தொடை வேணியான் - மலர்மலையினை

யணிந்த கங்கைச் சடையராகிய சிவபிரான். தன், சரண் புகின் - திருவடிகளையே அடைக்கலமாக அடையின், பெரும் சுகம் - பேரின்பமாகிய முத்தி நலத்தினை, அடைவாய் - அடையப் பெறுவாய். ஈது உறுதி.

( கு - ரை ) ஒருங்குதல் - ஒன்றுபடுதல் ( சேர்தல் ) இரும் கடா - பெரிய எருமைக்கடாய், ( எமனுடை ஊர்தி ) போழ்து - போது எனவாயிற்று. எல்லாம் என்பது எலாம் என மருவிற்று ஓர்தல் - உள்ளதை உள்ளவாறு உணர்தல். பிருங்கம் - வண்டு பெரும்சுகம் - பேரின்பம் ( நிரதிசய வாழ்வு ) ஆர்தல் - நிறைதல் ( ஒலித்தலுமாம் ) ஏகாரம் - தேற்றம். ஐயாற்று வேணியான் - பிருங்கமார்தொடை வேணியான் எனக்கொண்டு கூட்டுக. தொடுக்கபடலின் தொடையாயிற்று.

( தொடரும் )

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Sattanathaswami Devasthanam, Sirkali.

"We visited the Periakovil at Sirkazhi. The maintenance of the temple is wholesome and the courtesy shown by the temple authorities was cordial. We are extremely grateful and no wonder that the temple has been the recepient of awards for good maintenance.

The Superintendent was extremely kind and took all of us around and explained the hidden sacred meanings and tale of the temple origin. It is so very impressive and refreshing.

With regards,

(Sd.) H. Rangaswami,
Divisional Superintendent in charge
Southern Railway, Tiruchi.

23—5—72.

# திருவருட்பயன் விளக்க உரை

தருமையாதீனப் புலவர், மகாவித்துவான்,
திரு. சி. அருணைவடிவேல் முதலியார்

( மலர் 31, இதழ் 8, பக்கம் 448 - இன் தொடர்ச்சி )

## எட்டாவது குறள்

" ஓராதே ஒன்றையும்உற் றுன்னுதே நீமுந்திப்
பாராதே பார்த்ததனைப் பார் "

எனவரும்.

இதன் பொருள் :- பார்த்ததனை - மேல், 'ஆறு ஆதி யில்' என்றும், 'செய்வான் முதலிய நான்கும் உளன்' என்றும் உண்மை மாத்திரையானும், உடம்பிற்கு உயிரும், பளிங்கிற்குப் பகலவனும், கண்ணிற்கும் உயிருக்கும் வேறுன ஒளியும், ஐம் பொறிகட்கு ஆன்மாவும் என்னும் உவமைகளின் வைத்துச் சிந்திக்கும் சிந்தனையால் பொது வியல்பானும் உணர்ந்த முதற் பொருளை; ஒன்றையும் உற்று ஓராதே - அங்ஙனம் உணர்ந்தபின்பு மேலும் யாதொன்றனையும் பற்றி ஐயுற்று ஆராயாமலும்; உன்னுதே - யாதொன்றையும் பொருளாகப் பற்றி அதன்கண் அழுந்தாமலும்; நீ முந்திப் பாராதே - 'சிந்தனையில் உணர்ந்த முதல்வனை இனி நான் விடாது தொடர்வேன்' என்று உனது போதத்தின் வழிச் சென்று பற்றுமலும்; பார் - அதன் அருளின் வழியே அடைந்து நிற்பாயாக.

விளக்க வுரை:- " ஒன்றையும் உற்று " என்பது தாப்பிசையாய் முன்னும் சென்று இயைந்தது. அங்ஙனம் இயையுங்கால் "உற்று" என்பது முன்னர், 'ஏதுவாக உற்று' எனவும், பின்னர், 'பொருளாக உற்று' எனவும் பொருள் பயந்தது, ஓர்தல், உன்னுதல், முந்திப் பார்த்தல் என்பவற்றை விலக்கினமையால், "பார்" என்ற விதி, பாரிசேடத்தால், அருள்வழிப் பார்த்தலாயிற்று, "ஓராதே" என்றதனல் ஐய உணர்வினையும், "உன்னுதே" என்றதனல் விபரீத உணர்வையும் விலக்கி, "பார்" என்றதனல் உண்மை யுணர்வே விதித்தார் என்க. ஏகாரங்கள் தேற்றப்பொருள. 'பார்ப்பதனை' என எதிர்காலமாக ஓதாது, " பார்த்ததனை " என இறந்தகாலமாக ஓதினமை

யின், அதற்கு, 'எப்பொழுதும் உன்னைப்பதாகிய திருவருளை' என உரைத்தல் கூடாமை யறிக.

இதனால், முதற் பொருளை அறிந்து அடையுமாறு கூறப் பட்டது.

**ஒன்பதாவது குறள்**

> "களியே மிகுபுலனு மாக்கருதி ஞான
> ஒளியே ஒளியா ஒளி"

எனவரும்.

இதன் பொருள் :- களியே மிகு புலனுமாக் கருதி - முதற் பொருளை அருள்வழியாகக் காணுமிடத்து அரும்புகின்ற இன்பத் தையே, மேலாக அடையத்தக்க எல்லையற்ற பேரின்பமாகவும் உணர்ந்து; ஞான ஒளியே ஒளியா ஒளி - பின்னும் பாசஞான பசு ஞானங்கள் வந்து தலைப்படாவண்ணம் அத் திருவருள் ஞானத் தையே பற்றுகப் பற்றி நின்று, அந்நிலையால் அம்முதற் பொருளில் அழுந்திவிடு.

விளக்க வுரை :- "களியே மிகு புலனுமா" என்றதனால் 'முதற்பொருளை அதன் ஞானமே கண்ணாகக் காணுமிடத்து, முன்பு என்றும் கண்டறியாததோர் இன்பம் தோன்றும்' என்பது பெறப்பட்டது. இவ்வாறு பெறவைப்பதனை, 'அனுவாத முறை' என்பர். தோற்ற மாத்திரையான் உளதாகின்ற இன்பமே பின்பு எல்லையற்ற பேரின்பமாய்ப் பெருகித் தன்னைத் தலைப்பட்ட வரைத் தன்னுள் அழுந்தக்கொண்டு நிற்குமாகலின், அதனை, 'சிறிது' என்று இகழாது பற்றுக என்பார், "களியே மிகு புலனு மாக் கருதி" என்றும், 'இகழாது பற்றுமிடத்து முன்பு உலக இன்பத்தைப் பற்றியதுபோலப் பாச ஞான பசு ஞானங்களால் பற்றாது, பதிஞானத்தினாலே மேலும் பற்றி நிற்க' என்பார், "ஞான ஒளியே ஒளியா" என்றும், 'அந்த ஞானத்தால் அவ்வாறு பற்றி நிற்கவே, தோன்றிய இன்பம் பெருகி உன்னை விழுங்கி விடும்' என்பார், "ஒளி" என்றும் கூறினார். இன்பம் தோற்ற மாத்திரையால் வெளிப்படுதலை, 'சுகப் பிரபை' (இன்ப ஒளி) என்றும், அது பின் பேரின்பமாய்ப் பெருகி நிற்றலை, 'பரம சுகம்' (முடிந்த இன்பம்) என்றும் கூறுவர். 'இன்பம் தோற்ற மாத்திரையாய் நிற்றல் துரிய நிலையில்' எனவும், 'பேரின்பமாய்ப் பெருகி நிற்றல் அதீத நிலையில்' எனவும் உணர்க.

இதனால், 'முதற் பொருளைத் தலைப்பட்ட உயிர் இன்புறு மாறு இவ்வாறென அறிதல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.

**பத்தாவது குறள்**

" கண்டபடி யேகண்டு காணுமை காணுமைக்
கொண்டபடி யேகொண் டிரு "

எனவரும்,

**இதன் பொருள் :—** கண்டபடியே காணுமை காணுமை கண்டு (மாணுக்கனே, நீ முதற் பொருளைப் பிறவாற்ருற் காண மாட்டாது வருந்திப் பின் அருள்ஞானங் கண்ணுக அன்றே கண்டாய்! அதனுல்,) பின்னும் அவ்வாறு கண்டு நிற்றலே தக்கது; அங்ஙனங் காணும்பொழுது * அறியாமை வந்து தலைப்படாத வாறு காண்; (அங்ஙனம் காணவே, அம்முதற்பொருள் உன்னைத் தன்னிடத்து அடக்கிக் கொள்ளுமாகலின்,) கொண்டபடியே கொண்டு இரு - அது உன்னைக் கொள்ளுகைக்கு இயைந்த நிலை யையே நீயும் ஏற்று ஒருப்பட்டிரு.

விளக்கம் : "ஞான ஒளியே ஒளியா" என மேற்கூறிய தனையே " கண்டபடியே கண்டு " என அனுவதித்தார், அவ்விடத்துக் கருவி கள் நீங்கினமை காரணமாகக் 'கேவலம்' வந்து தலைப்படுதல் கூடுமாகலின், அது தலைப்படாதவாறு குறிக்கொண்டு நிற்றல் வேண்டும் என்பது கூறுதற் பயன் நோக்கி. எனவே, "கண்டு" என்பதனை இவ்வாறு கூட்டி யுரைத்தலே கருத்தாயிற்று. சிவ ஞான சித்தியுள்,

" அறியாமை அறிவகற்றி அறிவி னுள்ளே
அறிவுதனை அருளினுல் அறியாதே அறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடும்
கூடாதே வாடாதே குழைந்திருப்பையாயின் " 1

என்றதும் இந்நிலையையேயாம். சித்தியிலே ஓர் விருத்தப் பாதி போதும் " 2 எனக் கூறியதும் இப்பகுதியை நோக்கியே என்பர். பின் வந்த " காணுமை " வினை யெச்ச மாகலின், அதன்பின் ககரம் மிகாது ஓதுதல் பாட மாகாமை யறிக.

இதனுல், 'எல்லாவற்றையும் அறியப் பெற்ற உயிர், பிற வற்றை யெல்லாம் விடுத்துப் பேரின்ப நிலை ஒன்றிலே அழுந்தி விடுதல் வேண்டும்' என்பது கூறப்பட்டது. (தொடரும்)

---

1 சு - 8. 30.
2 சிவபோக சாரம் - 23.

# வாழ்த்தும் அஞ்சலியும்

## திருவடி வாழ்த்து

திரு. தத்புருஷ தேசிகர், 22—11—72.
(பாலகவி வே. இராமநாதஞ் செட்டியார்) தேவகோட்டை.

திருவால வாய்க்கயற்கட் செல்விமகிழ்
சொக்கேசன் தெய்வக் கோயில்
பெருவாசி பொருட்செலவில் புதுக்கிமுது
குன்றுமுதல் பெருமை சார்ந்து
திருவாரி வழங்குகின்ற திருக்கோயிற்
பணிகள்பல செய்து சீர்த்தி
உருவானோர் வழிவந்தேன் ஆதீனப்
பழவடிமை உரிமை பூண்டேன்.

இருக்குமுதல் மறைகளெலாம் ஏத்துமிசைச்
சொக்கேசன் இன்பம் சேர்க்கும்
திருக்கயிலை இருந்தருளும் சீகண்ட
குருமுதல்வன் தெய்வச் சைவ
கழுக்கமழும் எழிற்கமலை வளர்ஞானப்
பிரகாச வாழ்வு செல்வப்
பெருக்குமிகும் திருத்தருமைக் குருஞான
சம்பந்தப் பெரிய தேவன்.

விண்முகமாம் ஈசானம் வியன்கிழக்கில்
தத்புருடம் மேவும் தெற்குத்
திண்முகமாம் அகோரமெதிர்த் திசைவாம
தேவம்பச் சிமத்திற் சேரும்
ஒண்முகம்சத் யோசாதம் ஓதுமதோ
முகம்கீழ்ப்பால் உற்றுக் காக்கும்
சண்முகதே சிகஞான சம்பந்த
சிவகுரவன் தாள்கள் வாழ்க.

மேலான சிவனெறிக்கு மிக்கோங்கும்
தமிழ்மொழிக்கு வேண்டும் போதில்
தோலாத வெற்றிதரச் சிவபெருமான்
திருவருள்முன் தோன்றும் என்று

நூலாய்ந்தோர் கண்டமுடி புன்மையென
யாமறிய நுன்னை யெங்கள்
பாலான திருத்தருமைக் குருமணியாச்
சிவமளித்த பரிசு வாழ்க.

நயமே தழைக.

செந்தமிழ்க் கலைஞர். கும்பகோணம்.
புலவர். திரு. வி. ச. நடராசனர், 14—12—71.

# தருமையாற்றுப்படை

உலகம் உவப்ப உமையுடன் திகழ்தரும்
நிலவணி சடைமுடி நெற்றிக் கண்ணன்
மலமொரு மூன்றும் மாய்த்தல் காட்டி
மலர்தரு கல்லால் மரத்தடி இருந்து
பதிபசு பாசப் பான்மை தன்னைத்
தியாக சுந்தரன் சின்முத் திரையால்
யோகுசெய் நிலையில் உணர்த்தினன் நன்றே.
அப்பெரு நிலைதனை அவனவள் அதுதனை
எப்படி உணர்வோம் என்ற உலகில்
தீயுடன் நீர்தனில் திடமுற நின்றும்
காயுடன் கனிவகை காற்றே உண்டும்
மாதவம் பலநாள் மாண்புறச் செய்தும்
வேதம் ஆகமம் விரிவுரை கேட்டும்
உணரா மாந்தர் பலரால் உலகில்.
உணரேன் யானும் ஓய்ந்தேன் பாவி
என்றே இளைத்த என றன் நெஞ்சே
நன்றே வருக ! நவில்வன கேள் நீ
தாவுறும் குரங்கென ஓவுறு அலையென
மேவுதல் நீங்கி மேனிலை வேண்டில்
ஒன்றி இருந்து உயர்நிலை பெறுக !
என்னலும் நெஞ்சம் வழியது கேட்டு
ஏங்கலும் குருவருள் போற்றி நல்வழி
ஆங்கது நலமுற உரைத்தன கேண்மோ !
நெஞ்சே வாழி ! நெஞ்சே வாழி !
அஞ்சேல் வாழி ! அன்புடன் வாழ் !
குடமுனி தோன்றிக் குறுமுனி அருளால்
நடமிடும் அன்னை காவிரி வளத்தால்
சோறுடைத் தென்னும் சொற்புகழ் கொண்ட

விறுடைச் சோழ வள நா டதனில்
மாமயி லாடு துறையினை அடுத்தே
சேம வைப்பாம் ஞானக் களஞ்சியம்
தருமை எனும்பதி சார்ச் செல்க !
அருமை சான்ற அளப்பில் சோலை
பூங்குயில் கூவப் புள்ளினம் ஆர்க்க
மாங்கனி மணக்கத் தெங்கம் பழம்வீழ்
திருப்பதி அதனுள் திகழும் அமைதி !
திருவளர் காவிரி சென்று நீராடி
திருநீ றதனில் மீண்டும் ஆடி
வரும்வழி தன்னில் வயங்கிடும் மலர்கள்
கைதனில் ஏந்திக் கண்களி பூண்டு
பொய்தனை நீக்கிப் புளகாங் கிதமாய்
ஞான புரீசர் ஆலயம் செல்க !
மோன நிலைதனை உணர்த்திய முழுமுதல்
சேவடி பணிந்து தியானம் செய்து
பாவம் தொலைத்துன் பதமலர் போற்றிட
வந்தேன் என்ன வரவினைக் கூறி
நந்தி மரபின் நாயகன் தனது
செந்தளிர் அடியினைச் சிரமேற் கொண்டு
சேந்தனைப் பெற்ற கொற்றவை கோட்டம்
சேர்ந்தனை பெற்ருய் வெற்றித் திருவை
அந்தண் சோலை மேலைத் திசைதனில்
வந்தனைக் குரிய வரமருள் குரவன்
ஆனந்த பரவசர் ஆலயம் சேர்க
ஞான வொளியென அதனைக் காண்க !
கயிலைக் குருமணி ஈருத் திகழும்
கயிலை நாதன் கழலடி சேர்ந்த
குருமூர்த் தங்கள் கும்பிட் டெழுக !
வருக ! வருக ! என்றழைக் கின்ற
மணியொலி வழியே வடதிசை வாயில்
பணிவுடன் சென்று செந்தமிழ்ச் சொக்கர்
விரிதமிழ்க் கூடல் எனவுளம் மகிழ்ந்தே
பரிவுடன் அமர்ந்த பாங்கினை அடைக !
பூசை முகத்தினில் ஓர்பால் ஒதுங்கி
ஆசை அகற்றி ஆனந்தத் தேன்
பூரித் தாங்கே பொலிதரு நிலையை
வாரி வழங்கிட வந்தருள் ஐயன்
தேசிகன் காட்டும் திருவிளக் கொளியால்
கூசிடா துள்ளம் குளிரப் பெறுக !

பெற்றே பின்னர்த் தேசிகன் ஏகின்
பொற்ரு ளிணைகள் பூண்டிட வேண்டி
ஒடுக்கந் தன்னில் சென்று நீகாண
அடக்கந் தன்னெடும் அணிதிரு வாயில்
பூதநற் கணமே என்ன விளங்கிடும்
நாதன் வாயிற் காவல் தன்னை
நயந்தே போற்றி நவில்க நின்செய்தி
பயந்தான் அகற்றி அப்பணி யாளன்
அகமுகம் சென்றுடன் அமயம் பார்த்துத்
தகவுடன் எளியன் நின்தாளிணை காண
வந்தோன் பெரும ! நின்வண் புகழ் நயந்தென
வந்தமை கூறி அழைத்தே ஏகிடும்
வாயில் கடந்து வார முடனுய்
தாயினும் இனிய தயாவுடைத் தேசிகன்
முன்னர்ச் சென்றே நிலமுறப் பணிக !
நிலமுறப் படிந்தே எழுந்தனை யாயின்
நிலவொளி நயனத் தீட்சையும் பெறுவாய்
பதிவிரல் தன்னுல் பதிந்திடு மாறே
துதிபெறும் நீற்றை நின்னுதல் தீட்டுவன்
பரிசத் தீட்சையும் பாங்குடன் பெறுவாய்
குருவும் குறுநகை மலர்ந்துனை நோக்கி
வருகை யாதென வினவுறும் குறிப்பால்
நில கண்டமும் வாலிழை பாகமும்
கோல மானும் மழுவும் நீக்கி
வார்சடை முடியும் வயங்குறு நீறும்
நீரினும் குளிர்ந்த நீள்விழிக் கடையும்
என்பெழுந் தியங்கிய நோன்புறு வடிவும்
மன்பதை காக்கும் மலர்த்திரு வடியும்
கண்டிடப் பெறுவாய் கண்ட அஞ்ஞான்றே
கண்ணுதல் வழிவரு குருமணி போற்றி !
கமலை முனிவ ! கழலடி போற்றி !
விமல ஞகிய நந்தி போற்றி !
மெய்கண் டானெனும் மேலோய் போற்றி !
தெய்வ சிகாமணி வாழ்வே போற்றி !
கைலைக் குருமணி ஆணுய் போற்றி !
குமர குருபர தாதை போற்றி !
வடவா றென்னும் கங்கைக் கரையுறு
செருகாட் டூர்ப்பதி காசிமா நகராய்த்
தோன்றிய ஞான மேழிச் செல்வ !
அப்பர் அடிகள் ஆலயம் விளங்க

செப்பரும் பணிகள் செய்தநற் சீல
சென்னைப் பதியும் செந்தமிழ் நாடும்
ஈழமும் பரவிட யாண்டும் சென்றே
சைவமும் தமிழும் தழைத்தினி தோங்க
அயராப் பணிபுரி அண்ணல் வாழி!
அடியேன் அவனவள் அதுவெனும் உண்மை
அறியா வகையால் அயர்ந்தேன் வாடி
அந்நிலை தன்னை அடியேற் கருளி
வாழ்விப் பாயென வணக்கம் செய்நீ
கண்டிகை ஆயிரம் பூண்ட குருமணி
திண்ணிய உனது தன்மை நோக்கி
நீறு பொலிதரும் நிமலக் கோலம்
கமலை ஞானக் கமல பீடத்துச்
சண்முக தேசிக ஞானசம் பந்த
உண்முகச் சைவ ஆச்சா ரியனுய்
கைவந் தருளும் சின்முத் திரையால்
இருமை இன்பமும் எய்திடும் ஆற்றல்
தருமைத் தலைவன் தண்ணளி அருளும்
ஒளிதரு கயிலை மலைகிழ வோனே!

**BISHOP HEBER COLLEGE** Tiruchirapalli-2
12—11—71.

தருமபுர ஆதீனகர்த்தரான 25வது மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் காசியில் பரிபூரணம் அடைந்த செய்தியினைக் கேட்டு அதிர்ச்சியும் வருத்தமும் அடைந்தோம். சுவாமிகள் திருமேனி இறைவனடி சேர பிரார்த்திப்பதோடு, அவர்களுடைய பிரிவினுல் வருந்தும் ஆதீனத்திற்கும், அவரது பரம்பரையினருக்கும் கல்லூரியின் சார்பிலும், என் சார்பிலும் ஆழ்ந்த அனுதாபத்தினையும் வருத்தத்தினையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

தருமபுர ஆதீனம் 26வது மகாசந்நிதானமாக, ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள், ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் என்ற தீக்ஷையுடன் பட்டத்திலமர்ந்த செய்தியினைக் கேட்டு நெஞ்சம் மகிழ்ந்தோம். சந்நிதானத்தின் திருமுன்பு அகங்கனிந்து பூராட்டுதலையும் மகிழ்ச்சியையும் பிஷப் ஹீபர் கல்லூரியின் சார்பாகவும், என் சார்பாகவும் தெரிவித்துக்கொள்கிறேன்.

# திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடு

(மலர் 31, இதழ் 8, பக்கம் 473-இன் தொடர்ச்சி)

[திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீன ஸ்தாபகர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் ஜீவசமாதி கூடிய திருக்கோயிலாகிய ஸ்ரீ ஞானபுரீசுவர சுவாமி திருக்கோயில் மஹோற்சவம் 24—5—72 முதல் சிறப்பாக நடைபெற்றது திருவிழா நாட்களில், ஆண்டுதோறும் நிகழ்வதுபோல் இவ்வாண்டும் திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடு சிறப்பாக நடைபெற்றது. மாநாட்டில் சமய ஒருமைப்பாட்டை விளக்கும் முறையில் பல சமயங்களின் கருத்துக்களை எடுத்து விளக்கி அறிஞர்கள் பலர் சொற்பொழிவாற்றினர். அவற்றின் சுருக்கம் கீழே தரப்படுகின்றது.]

29—5—72 திங்கட்கிழமை ஆறும் திருநாள். சென்னை மறைத்திரு. இக்னேஷியஸ் இருதயம் அவர்கள் "கிறிஸ்தவம்" என்னும் தலைப்பில் உரையாற்றியபோது.

மனிதன் மனிதனை எதிர்ப்படும்போது எழும் இலக்கணங்கள் யாவும் மதம் மதத்தோடு எதிர்ப்படும் போதும் நிகழ்கின்றன. சில காலங்களில் சமயங்களிடையே எழும், பூசல், அவ்வச் சமயத்தை ஆழ்ந்தறியாத சிறுபிள்ளைத்தனமானவர்களால் நிகழ்வதே எனலாம். பருவ வளர்ச்சியும், பண்பாடு உடையவர்களுக்கிடையே ஏற்படும் உடன்பாடு போல, தற்காலத்தே சமயங்களிடையே ஒருமித்த நிலை ஏற்பட்டு வருகிறது. ஒவ்வொருவரும் மற்ற மதங்களை மதிக்கவும், ஓரளவு வணங்கவும் பழக வேண்டும்.

அண்மையில் உருவாகிய கத்தோலிக்கத் திருச்சபை தீர்மானம் ஒன்று 'கிறித்துவம் பிறமதங்களை வணக்கத்தோடும் - மரியாதையோடும் அணுகுகிறது' என்று கூறுகிறது.

சொற்பதங்கடந்தவன் இறைவன் என்ற திருவாசக இலக்கணத்தையே கிறித்துவமும் இறைவன் இலக்கணமாகக் கூறுகிறது. கடவுள் 'மூவொருவன்' என்பது கிறித்துவக் கோட்பாடு. அம்மூன்றுவன; தந்தை, மகன், தூய ஆவி என்பன. இறைவன் அன்பே வடிவானவன். சிவன் என்பதைச் சைவத்

தில் அருள் என்று கூறுவர். சைவசித்தாந்தம் கூறும் சத்தி நிபாதமே மூவொருவன் என்பதன் கருத்து. அகளமாய், யாரும் அறிவரிதாய் இறைவன் இருக்கிறுன் என்பது கிறித்தவக் கோட் பாட்டுக்கு உகந்ததே.

கிறித்துவப் பெரியார் வீரமாமுனிவர் 'வான்பழித்து இம் மண் புகுந்தான்' எனத் திருவாசகம் சுட்டும் இலக்கணம் எங்கள் ஏசுநாதருக்காகவே பாடப்பட்டது என்று போற்றிக்கொண்டமை நினைவு கூரத்தக்கது. கிறித்துவமும் ஒன்றுமில்லாமையால் இருந்து உயிர் தோன்றியது என்றே கூறுகிறது. சைவசமயப் பெருமக்கள் 'யானே பொய், என் நெஞ்சம் பொய்! என்றும் 'வன்நெஞ்சன்' என்றும் 'கள்வன்' என்றும் தம்மைக் குறிப் பித்துக்கொள்வதையே கிறித்துவம் 'நாமெல்லாம் பாபிகள்' எனச் சாற்றுகிறது. கிறித்துவம் கிரேக்கத் தத்துவத்தின்மேல் சில கோட்பாடுகள் கூட்டி ஆக்கப்பட்டது என்பது மட்டுமன்று, அது இந்திய தத்துவத்தோடும் மிக நெருங்கிவருகிறது என்பது கண்கூடு.

கோயம்புத்தூர், திரு. நா. கிரிதாரிபிரசாத் பி. ஏ., பி. எல். அவர்கள் "பகவத்கீதை" என்னும் தலைப்பில் உரையாற்றி யதன் சுருக்கம்.

மதம் என்பது ஒரு அகண்ட வஸ்து. பேச்சற்ற நிலையில் தான் மதம் தோன்றுகிறது. சொல் என்பது ஆண்டவனை மறைக்கும் சாதனம். எந்த இடத்தில் சொல் அற்றுப்போகிறதோ அங்கே ஆண்டவன் தோன்றுகின்றுன் என்பது வேதம். கண வனுக்கு - மனைவி போன்றது மனிதனுக்கு அவன் சொந்தச் சமயம். பிறசமயங்கள் அவனுக்குத் தன் இல்லத்திற்கு வரும் விருந்தினர் போல்வன.

ஒரு சமயம், சாத்திரங்களின்றி வாழலாம்; தோத்திரங் களின்றி வாழ முடியாது. கீதையில் சாத்திரத் தன்மையும் உண்டு; தோத்திரப் பகுதியும் உண்டு. மிகச்சிறந்த தத்துவ அறிஞரான பெட்டன் ரசல் கல்விபற்றி எழுதும்போது ஒரு கற்றவன் அஞ்சாதவனுக இருக்கவேண்டுமென்று எழுதினூர். கீதையில் இதே கருத்தை 'அருச்சுன அஞ்சாதே; காளைபோல் இரு; மரணத்துக்கு அஞ்சாதே என்று கண்ணன் பேசக் காண் கிறோம். 16வது அத்தியாயத்தில் அர்சுன மாயைப்போல் சமயத் திற்கு அரண் கூட்டுவது வேறு ஒன்று இல்லை என விளக்கப் படுகிறது. சைவத்தின் அடிப்படையும் இஃதே என்பதை

'நாமார்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம்' என்ற அப்பர் மொழி விளக்கக் காண்கிறோம். அப்பரின் இப்பாடலே சைவ சமயத்தைத் தட்டி எழுப்பித் தலைநிமிர வைத்தது.

சமரசம் காண்பதில் சைவத்துக்கு ஈடுஇணை இல்லை. இப் பொதுநோக்கு கீதையில் ஓரளவு காணப்படுகிறது. 'பாவி களில் கடையனாக இருந்தாலும் உன்னை நான் ஏற்றுக்கொள் வேன்.' மனிதன் மதத்தை ஏவல்கொள்ள வேண்டுமே தவிர, மதம் மனிதனை ஏவல்கொள்வது கூடாது.

சேவையே மதம் என்பது அப்பர் கருத்து. 'என்கடன் பணி செய்து கிடப்பதே' என்ற வாக்கு இதற்குச் சான்று. கர்மத் தால் - தர்மமும், தர்மத்தால் பிர்மமும் வளரும் என்கிறது கீதை.

ஆசைகளைக்கட்டி அதன்மேல் ஆதிக்கம்கொள் என்பது கீதைவாக்கு, சைவத்திற்குப் இது உடன்பாடேயாகும். உயிர் கள்யாவும்' இறைவனுக்கு அடைக்கலம் என்ற கீதைக்கருத்துச் சைவத்திற்கு மிகநெருக்கமானது 'அன்றே எந்தன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும், குன்றேயனையாய் எனையாட் கொண்டபோதே கொண்டிலையோ' என்ற மணிவாசகர் வாக்கு இக்கருத்தினை வலியூட்டக் காண்கிறோம்.

30—5—72 செவ்வாய்க்கிழமை ஏழாம் திருநாள் திரு. எம்பார் விஜயராகவாச்சாரியார் அவர்கள் 'வைணவம்' என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றியதன் சுருக்கம்.

பிரமசூத்திரத்திற்கு உரை எழுதிய சங்கரருக்கு முன்னரே வைணவம் தமிழ்நாட்டில் பரவியிருந்தது. சங்கரர் எதை வேண்டாம் என்கிறாரோ, அதை எல்லாம் வேண்டும் என்கிறார் இராமானுஜர். இறைவனும் உலகமும் சத்தியம் என்பது இரா மானுஜர் கொள்கை.

சித்து அசித்து, ஈசுவரன் என்ற முப்பொருளை ஆய்வது வைணவம். சித்து - ஜீவன், அசித்து - பிரகிருதி (பிரதானம்- மாயை), ஈசுவரன் - பரமாத்மா (ஸ்ரீமன். நாராயணன்). ஜீவ கோடிகள் எனக்குறிக்கின்றனர். ஜீவர்கள், பக்தர்கள், முக்தர்கள் நித்தியர்கள் என மூவகைப்படுவர். சித்தும் அசித்தும் ஈசு வரனைவிட்டுப் பிரிவதில்லை என்பன போல்வன வைணவக்கோட் பாடுகளாம்.

ஆனந்ததாண்டவபுரம் பிர்மஸ்ரீ இராமதாச ஐயர் அவர்கள் "அத்வைதம்" என்ற தலைப்பில் பேசியதன் சுருக்கம்.

ஸ்ரீ சங்கரர்க்கு அகச்சமயம் ஆறும் உடன்பாடே. தன்னை இறைவனுக்கு உரியனுக்கிக்கொள்ள வேண்டுமென்ற உயர்ந்த தத்துவம் உடையவனே வைஷ்ணவன் எனப்பாகவதம் கூறுகிறது. மூர்த்தி பேதங்கள் பலவாயினும் உள்ளிருக்கும் இறைவன் ஒருவனே. அத்வைதிகளுக்கு விஷ்ணு பக்தியில் எப்போதும் குறைவேயில்லை.

புலவர் திரு, கீரன், அவர்கள் 'கந்தபுராணத் தத்துவம்' என்ற தலைப்பில் ஆற்றிய விரிவுரையின் சுருக்கம்.

சிவபெருமான் அம்சமான முருகனை ஈசனுகவே ஏற்று வணங்க வேண்டுமென்பதே கந்த புராணத் தத்துவமாகும். தத்-அ; த்வம்-தன்மை அதன்தன்மை என்ற கோட்பாட்டிலேயே இதனைக் காணவேண்டும்.

முருகன் கருணை மறக்கருணையாகும். முருகப்பெருமான் சூரனது ஆணவத்தை மட்டுமே கொன்று, அவனை இரு கூருக்கி மயிலாகவும், கொடியாகவும் கொண்டான். முருகனைத் தொழுபவர் சூரனையும் தொழுகின்றனர். இது சூரனுக்குக் கிடைத்த பெரும்பேறு

முருகனை ராவுத்தன் என்பார் அருணகிரியார். ராவுத்தன் என்ருல் குதிரைசெட்டி என்பது பொருள். மயிலையே ஆடுப்பரி என்று கந்தரனுபூதி குதிரையாகச்சுட்டும், இதனைக் கந்த கோட்டப் பதிகத்துள் இராமலிங்க சுவாமிகள் குறிப்பர்.

கந்தபுராணத்தில் தட்சன் மகள் தாட்சாயணி புது வடிவம் வேண்டுவதன் தத்துவம், பாவம் செய்தவரோடு இருந்தவர், இணைந்தவர் யாவர்க்குமே அது இழுக்கு என்பதேயாகும். இக் கருத்தையே கம்பர் வீடணன் வாக்காக 'இளையவர் கவித்த மௌலி என்னையும் கவித்தி' என்று விளக்குவர்.

ஒரு பிறப்பில் பாவம் செய்தால் அடுத்த பிறப்பில் தண்டனை உண்டு என்பது கந்தபுராணத்தத்துவம்.

முருகன் அவதாரம், பஞ்சபூதச் சேர்க்கையால் ஆய உலகத்தை, பஞ்சபூதச் சேர்க்கையால் பெற்ற வடிவத்தால் வரவேண்டுமென்ற தத்துவத்தை விளக்குகிறது.

நான்முகனைச் சிறையிட்டது, நல்லவர்களை மட்டுமே படைக்கவேண்டுமென்பது.

# ஆடிப்பூர விழா

சிவாகம வித்துவான், சிவாகமரத்னகரம்,

சிவஸ்ரீ. S. சுவாமிநாத சிவாசாரியார்

பூரகர்மா என்பது ஆடி மாதத்தில் பூர நக்ஷத்திரத்தில் தேவிக்குச் செய்யப்படும் சிறந்த உத்சவம். இது தக்ஷிணாயனத்தின் ஆரம்பத்தில் செய்யப்படுவதால் சக்தியின் தோற்றத்தை வெளிப்படுத்துவதாகும். அதாவது உத்தராயணம், சிவன். தக்ஷிணாயனம் சக்தி. எனவே சக்தி தொழில்பட்டு உலகத்தை சிருஷ்டி செய்யத்தொடங்கும் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட திருவிழாவாகும். இவ் உத்சவத்திற்கு முக்கியம் முளைப்பயறு வைத்தல்.

முதல்நாள் மகநக்ஷத்திரத்தில், தேவிக்கு வெள்ளைசாத்தி அதிவாசமாக வைத்து கௌரியைச் சுற்றிலும் வாமாதி சக்திகளைப் பூஜித்து உபசரிக்கவேண்டும். இது உலக சிருஷ்டியின் பொருட்டு ஒரு சக்தி பல சக்திகளைத் தோற்றுவிக்கும் தத்துவமாகும்.

சிவபெருமான் முன்னிலையில் (சக்தியை) கௌரியை எழுந்தருளச்செய்து நவசக்திகளை சுற்றிலும் தியானிக்குப் பிறகு தேவியால் தெற்கில் விநாயகனையும் வடக்கில் துர்க்காதேவியையும் ஸ்தாபித்து வழிபடவேண்டும் என்று காரணாகமம் கூறுகிறது.

சிருஷ்டி தொடக்கத்தில் இடையூறுநீக்க விநாயகரையும் வெற்றிபெற துர்க்கை (ஸ்திதி - விஷ்ணுசக்தி)யையும் பூஜிப்பது பொருத்தமாகும்.

மற்றும் தேவியின் எதிரில் நெல், அரிசி, முளைப்பயறு. உப்பு, மஞ்சள், சாணப்பொடி. அருகு அக்ஷதை இவைகளைவைத்து தேவிக்கு முதலில் ஜலம்கொடுத்து (அர்க்கியம்) அரிசி, நெல் இவைகளைத்தரிசிக்கச்செய்து, ஜலத்தினால் தேவியைப்பிரதக்ஷிணமாகச் செய்து பிறகு. கோமயப் பொடியை காலில் வைத்தும். உப்பைக் கண்டத்திலும். அறுகு அக்ஷதைகளைச் சிரசில்வைத்தும், உபசரித்துக்கொண்டாடவேண்டும். இது பஞ்சபூத சிருஷ்டியைக் காட்டும்; இதன்பிறகு ஒன்பது, அல்லது ஐந்து கன்னிகைகளுக்கு வஸ்திரம் சந்தனம் புஷ்பம்அளித்து தக்ஷிணைகொடுத்து

உபசரிக்கவேண்டும். இது தேவியின் ஆவிர்ப்பவத்தை பிரத்யக்ஷமாகக் கண்டு களிப்பதாகும்.

ஸ்திரீகளுக்கு, எண்ணெ மஞ்சள் பொடி கொடுத்து எண்ணெ தேய்த்து ஸ்நானம்செய்யச் செய்யவேண்டும் என்றும் புருஷர்களுக்கு தைல ஸ்நானம் செய்து வைக்கலாம். முக்கியமாக ஒன்பது ஸ்திரீகள் என்று குறிப்பிட்டு வாமாதி சக்திகளாக தியானம் செய்யவேண்டும் என்று காரணுகமம் கூறுகிறது.

இந்த உத்சவம் ஸம்வத்சரகிருதமான தோஷங்களைப் போக்குவதுடன். உலகத்தைச்செழிக்கச்செய்யும். தனம், தான்யம் மிகுதியாக உண்டாகும். அரசன் ஜெயம் பெறுவான் என்பது இதன் முக்கிய பலன்.

ஆடிப்பட்டம் தேடிவிதை என்பது பழமொழி. அம்பிகை அருளால் நிலமகள் பல்வளங்களும் தந்து நாடு செழிப்புறவும் நல்லருள் புரியவும் ஆடிப்பூர விழாவைச் சிறப்புறக் கொண்டாடி மகிழ்வோமாக.

இவ் ஆடிப்பூரத் திருவிழா வேளூர், சீகாழி, திருக்கடவூர் முதலிய ஆதீனத் திருக்கோயில்களில் நடைபெறுகின்றது.

---

## பார்வையாளர் குறிப்பு நகல்

### தருமபுரம் ஆதீனம்

### ஸ்ரீ கம்பஹரேஸ்வரசுவாமி தேவஸ்தானம், திருபுவனம்.

சரபர் சன்னதிக்கு வருகின்ற வாய்ப்பு எனக்கும் என் குடும்பத்திற்கும் கிட்டியது. சரபர் சிலே ஆச்சரியத்தையும் அதிசயத்தையும் காட்டி நிற்கும் காட்சி என் மனத்தில் பதிந்துவிட்டது. ஆலயத்தின் அமைப்பும், அழகுற வடித்துள்ள சிற்பங்களும் தமிழகத்தின் பண்பின் சிகரமென விளங்குகின்றன.

மற்ற ஆலயங்களைப்போல் தருமை ஆதீனம் ஆலயத்தினைக் கண்ணும் கருத்துமாகப் பேணி, போற்றி, வைத்திருக்கும் முறை போற்றுதற்குரியது

(ஒம்.) பு. ரா. கோகுலகிருஷ்ணன்,
நீதிபதி, உயர்நீதி மன்றம்
தமிழ் நாடு.

11—6—72.



# செய்திகள்



தருமையாதீனம் சென்னை, சமயப் பிரசார நிலையத்தில்

**மாதாந்தர வழிபாடு :**

சென்னை சமயப் பிரசார நிலைய அன்பர்களின் மாதாந்தர வழிபாடும் சமயப்பிரசாரமும் சென்னை மீனம்பாக்கத்தை அடுத்த திரிசூலநாதர் ஆலயத்தில் 25—6—72 அன்று சிறப்பாக நடைபெற்றது. நிலைய அன்பர்கள் 50 பேருக்குமேல் கலந்துகொண்டனர். சிவபுராணப் பாராயணம் செய்துகொண்டு வெளிப் பிராகாரம் வலம் வந்து முறையாக ஒவ்வொரு சந்நிதியிலும் வழிபாடு செய்யப்பட்டது. ஸ்ரீ திரிபுரசுந்தரி சமேத ஸ்ரீ திரிசூலநாதருக்கு சகஸ்ரநாம அர்ச்சனையும் செய்யப்பட்டது. திரு சு. ஞானப்பிரகாசம் திரு ப வடிவேல் பிள்ளை, திரு புண்ணியகோடி, திரு. என். இராமமூர்த்தி அய்யர் ஆகியோர் திருமுறைப் பாடல்களைப் பாடினார்கள். அம்பாள் சந்நிதியில் அபிராமி அந்தாதி பாடல்கள் 100ம், மீனாட்சி அம்மன் பிள்ளைத்தமிழ்ப் பாடல்களும் பாராயணம் செய்யப்பட்டன. வழிபாடு முடிந்த பின்னர் கோயில் வெளிமண்டபத்தில் சமயச் சொற்பொழிவு நிகழ்த்தப்பட்டது. திருக்கோயில் ஆசிரியர் திரு. ந. ரா. முருகவேள் அவர்கள் கோயில் வரலாற்று அமைப்புப்பற்றி விரிவுரையாற்றினார்கள். திரு. வி. என். ஆறுமுகம் அவர்கள் திரிசூலம் என்றால் என்ன என்பதற்கு விளக்கம் தந்து பேசினார். திரு. புலவர். மு. கு. புண்ணியகோடி, திரு. சிவாநந்த முதலியார், திரு. சங்கர நாராயணன், திரு. கயப்பாக்கம் சோமசுந்தரம் செட்டியார் முதலியோர் ஆலய கூட்டு வழிபாட்டுச் சிறப்புப்பற்றிப் பேசினார்கள். கோவில் அறங்காவலர்களும் சிவாசாரியர்களும் எல்லோரையும் வரவேற்று வழிபாட்டைச் சிறப்புறச் செய்தனர். திருப்பணிக்குழு திரு. குப்புசாமி அய்யர் வரவேற்றுப் பேசுகையில் அடிக்கடி கோயிலுக்கு வந்து வழிபாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். கோயில் கும்பாபிஷேகத்துக்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் அஷ்டபந்தன மருந்துகொடுத்து உதவியதற்குத் தமது நன்றியையும்வணக்கத்தையும்தெரிவித்துக் கொண்டார். ஸ்ரீமத் சுவாமிகள் ஆலயவழிபாட்டின் சிறப்புப்பற்றி பேசி எல்லோருக்கும் நன்றியுரை கூறினார்கள். திருப்பணிக்கு நன்கொடையாக வழிபாட்டு அன்பர்கள்மூலம் வசூலானதொகை ரூ. 138—00 திருப்பணிக்கு அளிக்கப்பட்டது.



# எதிர்காலம்

ஜோதிஷார்ணவம்

## திரு. K. முத்துஜோதிடர்

( பரிதாபிஞு ஆவணிமீ 1௳ முதல் 31௳ முடிய )

( 17—8—72 முதல் 16—9—72 முடிய )

ஆடிமீ 32௳ புதவாரம் உதயாதி நாழிகை 32, விநடி 54-க்கு கும்ப லக்கினத்தில் இரவு முதல்யாமத்தில் ஸ்ரீ லோகரக்ஷகரான சூரியபகவான் சிம்மராசி பிரவேசம். ஆவணி மாதபிறப்பாக பிரவேசம் செய்கிருர். அதன் பலன் தக்ஷிணபாரதம் காவேரி தீரம் சோழவள நாடுகள் சுபிக்ஷமடையும். தன தான்ய விருத்தி யாகும். கடவுளை நம்பினவர்கள், தர்மிஷ்டர்கள் காப்பாற்றப் படுவார்கள். தர்மபூமிகளில் சீராக மழைபெய்துகொண்டே இருக்கும். தெய்வசக்தி ஓங்கும். தர்மம் ஓங்கும். ராகு, கேதுக் கள் ராசி மாறுதல். தனுசு, மிதுனம் இந்த ராசியில் பிரவேசிக் கப்போவதால் மிலேச்சதேசங்கள், நாஸ்திக தேசங்கள், அதர்ம பூமிகள் எல்லாம் ரொம்ப பாதிக்கப்படும். இயற்கை கோளாறு களாலும் அமைதிக்குறைவாலும், துர்பிக்ஷத்தாலும் பாதிக்கப் படும். எவராலும் அவரவர்கள் மதத்தை ரக்ஷித்து தர்மமாய் நடந்தால் காப்பாற்றப்படும். சுபமாகும்.

### 1. மேஷம் – அசுவதி – பரணி – கார்த்திகை ¼

மேஷராசி 9 பாதங்களும் பூர்ணமான சுபபலனைத்தரும். விவாஹாதி சுபகாரியங்களும், புதிதான கிரகங்கள் வாங்குதலும், ஆடை ஆபரணங்கள் வாங்குதலும். ஜீவன லாபமும் ஏற்படும். ஸ்திரமான சுகமான வாசம் ஏற்படும். புதன், வியாழன் சுப மாகும்.

### 2. ரிஷபம் – கார்த்திகை ¾ – ரோஹிணி – மிருகசீர்ஷம் ½

ரிஷபராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும். அடிக்கடி வீண் அலைச்சல்கள் இருந்துகொண்டு இருக்கும். வரவுக்குமேல்

செலவு இருந்துகொண்டு இருக்கும். வாகனங்களும், ஆடு, மாடு முதலியவைகளும், உபாதியைக் கொடுக்கும். எல்லாக் காரியங்களும் ரொம்பவும் முயற்சியின்பேரில்தான் நடக்கும். வெள்ளி, சனி சுபமாகும்.

### 3. மிதுனம்–மிருகசீர்ஷம் ½ – திருவாதிரை–புனர்பூசம் ¾

மிதுனராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபபலனைத்தரும் தொழில் விருத்தி அடையும். புதிதான முறையில் படிப்பு விருத்தியாகும். சாதிக்க முடியாதகாரியங்களை எல்லாம் சுலபமாக சாதிக்க முடியும். எங்கும் கீர்த்தி உண்டாகும். ஞாயிறு. திங்கள் சுபமாகும்.

### 4. கடகம் – புனர்பூசம் ¼ – பூசம் – ஆயில்யம்.

கடகராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும். விவசாய காரியங்களில் இடைஞ்சல்கள் ஏற்படும் அநேகம்பேர்களுடைய ஈதிபாதைகள் உண்டாகும். காரியங்களில் தவக்கம் உண்டாகும். எல்லாக்காரியங்களும் தெய்வபலத்தால்தான் நடக்கும். செவ்வாய், புதன் சுபமாகும்-

### 5. சிம்மம் – மகம் – பூரம் – உத்திரம் ¼.

சிம்மராசி 9 பாதங்களும், பூர்ணமாக சுபமாகவே இருந்துகொண்டு இருக்கும். ஜீவனம் விருத்தியாகும். குடும்பம் ஸ்திரமாக இருக்கும். மேலோர், பெரியோர்களால் எல்லாக் காரியங்களும் அனுகூலமாக நடக்கும். வியாதி குணமாகும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

### 6. கன்னி – உத்திரம் ¾ – ஹஸ்தம் – சித்திரை ½.

கன்னியாராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைக்கொடுக்கும். எப்பொழுதும் கவலைகளும், தொல்லைகளும் இருந்துகொண்டு இருக்கும் நல்ல காரியங்கள் செய்வதில் இடையூறுகள் இருந்து கொண்டு இருக்கும். துஷ்டர்களுடைய சேர்க்கை ஏற்படும். சனி, ஞாயிறு சுபமாகும்.

### 7, துலாம் – சித்திரை ½ – சுவாதி – விசாகம் ¾

துலாராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். தெய்வீகமான காரியங்கள், யாகங்கள் முதலிய காரியங்கள் அடிக்கடி நடந்துகொண்டு இருக்கும். ஸ்தாவர ஜெங்கம சொத்துக்களில்

கிரய விக்ரயங்கள் ஏற்படும். வரவு, செலவு சமமாக இருந்து கொண்டு இருக்கும். உலகபிரசித்தியும், கீர்த்தியும் உண்டாகும். திங்கள், செவ்வாய் சுபமாகும்.

**8. விருச்சிகம் – விசாகம் ¼ – அனுஷம் – கேட்டை.**

விருச்சிகராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும் இடம் மாறுதல் ஏற்படும். உத்தியோகம் விருத்தி அடையும். விவகாதி சுப காரியங்களால் கிரக சுகம் ஓங்கும். நஷ்டமான பொருள் தானுக வந்து சேரும். ஆரோக்யம் உண்டுபண்ணும் உறவினர் கள், சிநேகிதர்களைக் கொண்டாடுவார்கள். புதன், வியாழன் சுபமாகும்.

**9. தனுசு - மூலம் – பூராடம் – உத்திராடம் ¼**

தனுர்ராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத் தரும். எல்லாக் காரியங்களும் ரொம்பவும் முயற்சியால்தான் நடக்கும். விவகாரம் ஜெயிக்கும். வரவு, செலவு சமமாக இருந்துகொண்டு இருக்கும், அடிக்கடி சஞ்சாரங்கள் இருந்து கொண்டு இருக்கும். வெள்ளி சனி சுபமாகும்.

**10. மகரம்-உத்திராடம் ¾ – திருவோணம் – அவிட்டம் ½**

மகரராசி 9 பாதங்களும் சுபமாகவே இருந்துகொண்டு இருக்கும். தூரதேசத்திலிருந்து அழைப்புப் பத்திரம் வரும், ஜீவனம் விருத்தியடையும். மேலோர், பெரியோர்களின் அன்பி னுல் சகலமும் சாதிக்க முடியும். தெய்வசக்தி அதிகமாகும். ஞாயிறு, திங்கள் சுபமாகும்.

**11. கும்பம் – அவிட்டம் ½ சதயம் –பூரட்டாதி–¾,**

கும்பராசி 9 பாதங்களும் விசேஷமான மேன்மையைத்தரும். ஸ்திரமான ஜீவனம் ஏற்படும். நஷ்டமான பொருள் தானுக வந்துசேரும். விவகாரம் ஜெயிக்கும். குடும்பம் ஓங்கும். மனம் நிம்மதியாக இருக்கும். செவ்வாய், புதன் சுபமாகும்.

**12. மீனம் – பூரட்டாதி ¼ – உத்திரட்டாதி – ரேவதி.**

மீனராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். தெய்வ பலம் முன்னின்று காக்கும். ஜீவனம் விருத்தியடையும். களத்திர புத்திராதிகளால் நன்மை ஏற்படும். எதிர்பாராதபடி தொழில் மூலம் லாபம் ஏற்படும். சகலமான காரியங்களும் சுபமாக நடக் கும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

[ 500-ம் பக்கத் தொடர்ச்சி ]

| ஆண்டு | | தேர்வெழுதி யோர் | | தேர்ச்சி பெற்றோர் |
|---|---|---|---|---|
| 1960 | — | 26 | — | 26 |
| 1961 | — | 21 | — | 16 |
| 1962 | — | 18 | — | 18 |
| 1963 | — | 12 | — | 12 |
| 1964 | — | 3 | — | 3 |
| 1965 | — | 9 | — | 8 |
| 1966 | — | 13 | — | 13 |
| 1967 | — | 9 | — | 9 |
| 1968 | — | 32 | — | 32 |
| 1969 | — | 32 | — | 27 |
| 1970 | — | 45 | — | 41 |
| 1971 | — | 75 | — | 69 |
| 1972 | — | 48 | — | 53 |
| 1972 முடிய தேர்ச்சிபெற்றவர்கள் | | | | 458 |

## பழைய மாணவர் கழகம் :

ஸ்ரீ வெள்ளியம்பலவாணர் திருப்பெயரால் இக்கல்லூரியின் பழைய மாணவர்கள் பலரையும் இணைத்து வருகிறது இக்கழகம். ஆண்டுக்கொருமுறை பழைய மாணவர்களை ஒன்றுகூட்டிப் பல்வேறு கருத்துக்களைக் கேட்டறிதற் பொருட்டும், சிறந்த பல தமிழ் வளர்ச்சித் திட்டங்களை வகுத்தற் பொருட்டும், இக்கழகம் அமைக்கப்பெற்றுள்ளது. இக்கல்லூரியின் வெள்ளி விழாவைச் சிறந்த முறையில் நிகழ்த்துதற்கும், வெள்ளி விழாமலர் ஒன்று கண்களையும் கருத்தையும் கவரும் வண்ணம் வெளியிடுதற்கும் இக் கல்லூரி பழைய மாணவர்களும் சிறந்த முறையில் செயலாற்று கின்றனர்.

## வெள்ளி விழாச் செயற்குழு :

தலைவர்: திருவண்ணாமலை ஆதீனம் குன்றக்குடி குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள் ( தவத்திரு. குன்றக்குடி அடிகளார். ) இணைத் தலைவர்: திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் வித்துவான் காசிவாசி ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள். செயலாளர்: புலவர், திரு. அறிவுடைநம்பி எம். எல். சி., துணைச் செயலாளர்கள்: புலவர், திரு. சொ. சிங்காரவேலன் எம். ஏ., புலவர், திரு. பி நடராசன். அலுவலகச் செயலாளர்: புலவர்,

திரு. வி சா. குருசாமி தேசிகர். பொருளாளர்: சிரோமணி வித்துவான், திரு. வி. சம்பசன். இணைச் செயலாளர்கள்: வித்துவான், திருமதி. ப. நீலா. புலவர். திரு. இரா. செல்வக் கணபதி.

## மலர்க்குழு :

புலவர். திரு. வி. சா. குருசாமி தேசிகர். புலவர், திரு. சொ. சிங்காரவேலன் எம். ஏ., புலவர். திரு. இரா. செல்வக்கணபதி. புலவர். திரு. சோ. சுவாமிநாதன்.

ஆண்டுவிழா :- ஆண்டுதோறும் ஆவணி மூலத்திருநாளில் இக்கல்லூரியின் ஆண்டுவிழா நடைபெறும். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் சிறந்த தமிழ்ப் புலவர்களுக்குப் பட்டம் வழங்கி அவர்களுடைய அரும்பெரும் சொற்பொழிவுகளைக் கேட்கும் வாய்ப்பை மாணவர்களுக்கு வழங்கி வருகிறார்கள். ஸ்ரீலஸ்ரீ குருமணி அவர்களே எழுந்தருளியிருந்து அருளாசி வழங்கியும் பரிசுகள் வழங்கியும் மகிழ்வார்கள்.

வெள்ளி விழா : 25 ஆண்டுகள் நிரம்பிய இக்கல்லூரியின் வெள்ளி விழாவைச் சிறந்த முறையில் நிகழ்த்துவதற்குத் திட்டங்கள் பலவற்றையும் வகுத்து விழாக்குழு ஒன்றை அமைத்துச் சிறப்புற நடைபெறச்செய்தருளுகின்றவர்கள், தருமையாதீனம் 26 வது ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள். தமிழ்ப்புலமையும், நாவன்மையும், பலகலையறிவும், உலகியற் பாங்கும் படைத்து தமிழ்நாடு இலங்கை முழுதும் சென்று தெய்வத்தமிழ் சொற்பொழிவுகளால் மக்கள் மனமெலாம் கவர்ந்து மன்னி விற்றருந்தருளும் குருமகாசந்நிதானம் அவர்கள் திருவடிகளை வணங்கி வாழ்த்துகிறோம். கல்லூரியின் பொன் விழா மணி விழா முதலிய அனைத்து விழாக்களும் நிகழ்த்தி இளைய மாணவர்களின் வாழ்வு சிறக்க அருளாசி வழங்கும்படி பணிவுடன் வேண்டுகிறோம். கல்லூரியின் வளர்ச்சிக்கு நிலையான ஆக்கத்திட்டங்கள் பலவற்றையும் அமைத்தருள திருவுளம் கொண்ட மகாசந்நிதானம் அவர்கள் திருவடிகட்கு நன்றியறிதலோடு கூடிய வணக்கங்களைக் கூறிக் கொள்கிறோம். தருமையும் கமலையும் விரிதமிழ்க் கூடலும் திருநகராக அரசு வீற்றிருந்தருளும் குருமூர்த்திகளின் திருவடி நிழலில் பயிலும் இக் கல்லூரி மாணக்கர்கள் மறந்தும் புறந்தொழா அறக் கற்புடைய தனித் தொண்டர்களாக நாடெங்கிலும் உலவி இவ் வாதீனத்தின் அருட்பெருமையையும் அங்குத் தாம் பயின்ற தமிழ் மொழியின் மணங்கமழ் தெய்வத்து இள நலத்தையும் பரப்புவர் என்பது உறுதி. வாழ்க தருமையாதீனம்! வளர்க பல்கலைக் கல்லூரி !!

திருவாவடுதுறை ஆதீனத்துக்குச் சொந்தமான

## ஸ்ரீ கோமுக்தீசுவர சுவாமி கோயில்

# திருக்குடமுழுக்குப் பெருவிழா

தலச் சிறப்பு :— சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் தேவாரத் திருப்பதிகம் பெற்ற தலங்களுள் சிறப்புடைய ஒன்று திருவாவடுதுறை. ஆ அடுதுறை - பசுத் தன்மை நீங்கிய இடம். இது வடமொழியில் 'கோ முத்தி புரம்' எனப்படுகின்றது. திருக் கயிலையில் இறைவியும், இறைவனும் ஆடிய சொக்கட்டான் ஆட்டத்தில், இறைவனை வென்ற இறைவிக்கு அதனல் ஏற்பட்ட களிப்புக் காரணமாக உண்டாகிய பசு வடிவம் இத்தலத்தை அடைந்து இறைவனைப் பால் சொரிந்து வழிபட்டமையால் நீங்கியது அது காரணமாகவே இத்தலம் இத்திருப்பெயர் பெற்றது. போகர் முதலிய சித்தர்கள் பலர் தங்கியுள்ள காரணத் தால் 'நவகோடி சித்த புரம்' என்றபெயரையும் இஃது உடையது. பொதிகை மலையில் உள்ள அகத்தியரைக் காணவேண்டிக் கயிலாயத்தினின்றும் போந்த சித்தரை இறைவன் திருவருள், மூலன் என்பவன் உடம்பில் புகுந்து திருமூலராகி இங்குள்ள போதி விருட்சத்தின் (அரச மரத்தின்) கீழ் சிவபோகத்தமர்ந்து ஆண்டுக்கு ஒரு பாடலாகத் திருமந்திர நூலை அருளிச்செய்யுமாறு செய்தது. பல அதியற்புதச் செயல்களை நிகழ்வித்துத் திரு வருளின் சிறப்பை உலகிற்கு உணர்த்திய, திருவிசைப்பா அருளிய திருமாளிகைத் தேவர் இங்கே எழுந்தருளியுள்ளார். தேவர்கள் முனிவர்களது வேண்டுகோளின்படி சிவபெருமான் இங்கு மகாதாண்டவம் செய்தருளிய இடம் 'போதி யம்பலம்' எனப் பெயர்பெற்று விளங்குகின்றது. முசுகுந்தச் சக்கிரவர்த்திக்குக் காட்சியளித்துப் புத்திரப் பேறு உண்டாக அருள்புரிந்த செம் பொன் தியாகர் தனிச் சந்நிதியாக இங்கு வீற்றிருக்கின்றார்.

திருஞானசம்பந்தப் பெருமான் இங்குள்ள இறைவனை வேண்டித் திருப்பதிகம் பாடி உலவாக் கிழி பெற்றுத் தம் தந்தை யாரது வேள்விக்கு உதவினர். இவ்வற்புதச் செயலை அப்பர் தமது திருநேரிசையில் குறித்தருளுகின்றார். இது மூவர் திருப் பதிகங்களுடன், சேந்தனரது திருவிசைப்பாவும் பெற்றுள்ள தலம். சுவாமிபெயர், மாசிலாமணிசுசர்; அம்மை பெயர், ஒப்பிலாமுலை யம்மை. தீர்த்தம், கோமுத்தி தீர்த்தம். தல விருட்சம் படர் அரசு.

கும்பாபிஷேக நிகழ்ச்சி :- திருக்கயிலாயபரம்பரைத் திருநந்தி மரபில் வந்த ஆசாரியர் சித்தர் சிவப்பிரகாசரது அருளாணையின் வண்ணம் ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள் நிறுவிய ஞானபீட ஆதீனம்

இத்தலத்திலே உள்ளது. வழிவழி இவ்வாதீனத்தின் பரிபால னத்தில் உள்ள இத் திருக்கோயிலில், இவ்வாதீன 22 ஆவது மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் அருளாணையின் வண்ணம் அண்மையில் ஆவணித் திங்கள் 11-ம் நாள் (27—8—72) ஞாயிற்றுக்கிழமை காலை 8-00 மணிக்கு மேல் 9-15க்குள் மகா கும்பாபிஷேக விழா மிகச் சிறப்பாக நிகழ இருப்பது, அன்பர் பலர்க்கும் மகிழ்வைத் தரும். திருவிடை மருதூர் மகா கும்பாபிஷேகத்தைத் தரிசித்து இன்புற்றது போலவே இம் மகாகும்பாபிஷேக விழாவையும் அனைவரும் தரிசித்து இறையருள் பெற்று உய்வோமாக.

---

27 July, 1972.

We were pleased to be given an audience by His Holiness of Dharmapuram Adhinam Mutt. We were honoured to be allowed to follow His Holiness in the performance of evening worship. Ours was an experience of awe mixed with reverence. Our senses and perceptions were heightened by the awareness of sublime spiritual presence. Each of us gained some insight into a spiritual realm of which westerners know all too little.

Faculty of Mount Senaris College, Ladysmith, Wisconsin, U. S. A.

தருமபுர ஆதீன மடம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தின் தரிச னம் எங்களுக்குக் கிடைத்தது குறித்து மகிழ்வு கொள்ளுகிறோம். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்துடன் மாலை வழிபாட்டுக்குச் செல்லும் பெருமையும் அளிக்கப்பட்டது. பயபக்தி அநுபவவயமானோம். அடக்கமான ஆன்மிக சக்தி அங்கு நிலவுவதை அறிந்த நிலையில் எங்கள் உணர்வுகளும் எண்ணங்களும் மிக உயர்நிலையடைந் தன. மேனாட்டினர் ஒரு சிறிதும் அறியாத ஆன்மிக உலகின் உள்ளுறையில் ஒரு சிறிதளவை நாங்கள் ஒவ்வொருவரும் பெற்றுப் பயனடைந்தோம்.

விஸ்கான்சின் பல்கலைக்கழகம், மவுண்ட் செனரீஸ் கல்லூரி லேடிஸ்மித் கலைப்பிரிவுகளைச் சேர்ந்த

(Sd.) Sister Mary Angelica Vogel,
Allan S. Fizgstad,
Victor Macaruso,
John Reilly Js.

தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் குருமூர்த்தக் கோயிலுக்கு



தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள், அடிக்கல் நாட்டியருளல்,

# சுதந்திரதின வெள்ளி விழா

திரு. அ. கல்யாணசுந்தர தேசிகர்

நமது பாரத தேசம் அந்நியர் பிடியிலிருந்து சுதந்திரம் பெற்று இருபத்தைந்து ஆண்டுகள் நிறைவு பெறுகின்றன. இந்த நிறைவை வெள்ளி விழாவாகக் கொண்டாடத் திட்டமிட்டிருக்கின்றோம்.

நாட்டுச் சுதந்திரம் பெற்ற நாம் மற்றும் பெறவேண்டிய சிந்தனைச் சுதந்திரம், பேச்சுச் சுதந்திரம், பொருளாதாரச் சுதந்திரம், வாணிபச் சுதந்திரம் போன்று பல வகையாலும் சுதந்திரம் பெறவேண்டியிருந்தது. நாட்டு விடுதலைக்கு உயிர்த் தியாகங்கள் பல செய்தோம். உயர்வடைந்துள்ள நாடுகளின் வரிசையில் சேர்வதற்கு இனியும் நாம் செய்ய வேண்டிய தியாகங்கள் மலை அளவு உள்ளன. ஆனால் அவைகளை நோக்கி மலைக்க வேண்டியதில்லை என்பதையும் நம்நாட்டுத் தலைவர்கள் செயலில் காட்டியிருக்கிறார்கள். பொறுமையாகத் திட்டமிட்டு வளர்ச்சி காண்பதாலேயே நமக்கு முழுவிடுதலையும் கிடைக்கும் என்பதனைக் கண்டார்கள். ஐந்தாண்டுத் திட்டங்களாகப் பலவும் கண்டோம். காணவும் உள்ளோம்.

சுதந்திர சுய நிர்ணய உரிமை உடைய ஜன நாயக அமைப்பில் உள்ள நம் நாட்டில் பல்வேறு அரசியல் கொள்கைகளையுடைய பல்வேறு கட்சிகள் கலந்திருந்தாலும், உள்நாட்டின் ஆட்சி முறையில் வேறுபட்ட கருத்துக்களைக் கொண்டிருந்தாலும், பிறர் நம்மைத் தாக்க வந்தாலும், நம் தாய் நாட்டிற்கு ஊறு செய்ய நினைத்தாலும், அப்பொழுதெல்லாம் "எங்களுக்குள் கட்சி பேதங்கள் எத்தனை இருந்தாலும், இந்தியர்கள் என்பவர் அனைவரும் ஒன்றே" என்பதனைப் பல சந்தர்ப்பங்களிலும் மெய்ப்பித்துவிட்டோம். இதனைக்கண்டு உலகமே வியந்துநிற்கிறது.

"ஓர்தாயின் வயிற்றில் பிறந்தோம் — தம்முள்
சண்டை செய்தாலும் சகோதரர் அன்றோ
ஒன்றுபட்டால் உண்டு வாழ்வே — நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே

எப்பதம் வாய்த்திடுமேனும் — நம்மில்
யாவர்க்கும் அந்நிலை பொதுவாகும்
முப்பது கோடியும் வாழ்வோம் — வீழில்
முப்பது கோடி முழுமையும் வீழ்வோம்"

என்றுனே அமரகவி பாரதி; அதனை அப்படியே கைக்கொண்டிருக்கிறேம் என்பதற்கு இதுவே சாட்சியாகும்.

ஆனல் விடுதலை பெற்றுவிட்டோம் என்பதாலேயே எவ்விதக் கட்டுத் திட்டமுமின்றி நினைத்ததை நினைத்தபடி செயலாற்றுவது இயலும், அவ்விதம் செயலாற்றுவதே சுதந்திரம் என்று எண்ணுவது பொருந்துமா? இந்தச் சுதந்திரம் என்பது மக்கள் மேம்பாட்டுக்கு ஒருவரை ஒருவர் சார்ந்திருந்து, ஒவ்வொருவரும் பிறரோடு ஒத்துக்கூடி, தன் சுயநலத்தில் உள்ள நாட்டத்தைக் குறைத்துக்கொண்டு, பொதுநலனே தன்னலனைகத் தம் நாட்டு நலனையே, ஏன் உலக நலனையே தன் குறிக்கோளாகக் கொண்டு உழைப்பதேயாகும்.

சைவ சித்தாந்தக் கொள்கை கடவுள், உயிர், தளை என்பன அநாதியே உள்ளவை, அழிவில்லாதவை என்று கொள்வது. உயிருக்கு ஓரளவு சுதந்திரம் இருந்தாலும் தானே தனித்துச் செயல்படும் இயல்பு கிடையாது. ஏதோ ஒன்றைச் சார்ந்தே தான் இயங்குவது இயலும். அது தன் முனைப்பால் செயல்படும் போது கீழிறங்கித் தளையின் பாற்பட்டு உய்யும் வழி தெரியாது மயங்கித் தறிகெட்டு ஏங்கும். ஆனல் சிந்தித்துத் திட்டமிட்டு முன்னேறினல் கடவுள் வயப்பட்டு உய்ந்து ஆரா இன்பத்தை அடையும். இவ்விதம் முன்னேறும்போது பல தடைகளும் வந்துறும். அவற்றைப் பொறுமையோடு விலக்கிக்கொண்டு சிறிது சிறிதாக முன்னேறி குறிக்கோள் அடைதல் வேண்டும். அப்போது நமக்குக் குறைவிலா நிறைவுடைய தன்மை கிட்டும். இந்த வழியில் முன்னேறி வளம் கண்டு பிறர் பாலுள்ள கருணையினல் வழி காட்ட முன் வந்தவர்களே நம் ஆசாரிய மூர்த்திகளாக உள்ளவர்கள்.

நமக்கு இது கைகூடவேண்டுமானல் மனம் அடங்குதல் வேண்டும். மனம் ஒரு குரங்கு. அதனை அடக்குவதே ஒரு பெரிய சாதனை. அதனை அடக்குவதற்கு உறுதுணையாகவே நம் பெரியோர்கள் கடவுள் வழிபாட்டு நெறியைக் கண்டு உயர்த்தினர். இந்த உண்மையை அனுபவத்தில் கண்டவர் நமது தேச பிதாவாகிய காந்தியடிகள். மக்கள் மனதை ஒருமுகப் படுத்துவதற்கு அவர் கையாண்ட உத்தி, அவர் எப்பொழுது பொதுமேடைகளில் பேசத் தொடங்கினலும் கடவுட் பிரார்த்தனை செய்து பிறகுதான் விஷயத்துக்கு வருவார். பிறருக்காக இதனைச் செய்யாது தம் அன்றாடவாழ்க்கையிலும் வழுவாது கடைப்பிடித்து மக்களுக்கும் உபதேசித்து வந்தார். அவர் வழி வந்த பெருந்தலைவர்கள் பலரும் முயன்று நம் நாட்டைப் பல் வேறு துறைகளிலும் மேல்நிலைக்கு இட்டுச் செலுத்தி வருகிறர்கள். இந்தச் சிறிய காலவறையரையில் நாம் சாதித்துள்

ளவை ஒரு சிறிதுதான். இனிச்செய்யவேண்டியவை எவ்வளவோ உள்ளன என்பதனையும் மனதில் கொள்ளுதல் வேண்டும்.

மேலைநாடுகள் ஆன்மிக வளர்ச்சியில் அதிக நாட்டம் கொள்ளாது, உலகியல் வளர்ச்சிகளையே பெருக்கிக்கொண்டிருக்கின்றன. அதனால் அங்குள்ள மக்கள் மனம் அடங்காது, ஆசையால் உந்தப்பட்டு நிம்மதிகாண வழியறியாது தயங்கித் துன்புறுகின்றார்கள். காந்திய வழியே சாந்தி காணும் வழி என்பதனை இப்போது உணரலாயினர். அதனைத் தேடிப் பல்லாயிரவர் காந்தி வாழ்ந்த நம் நாட்டுக்கு வருகின்றார்கள்.

இந்தப் பேருண்மையின் உட்பொருளை உட்கொண்டே நம் நாட்டுத் திட்டங்கள் அமைக்கப்படுகின்றன. இனியும் அமைக்கப் படல் வேண்டும். அப்போதுதான் மனம் அடங்கி நமது ஆதீன குருமுதல்வர் குருஞானசம்பந்தர் அருளிச்செய்தபடி, "பரபரக்க வேண்டா பலகாலும் சொன்னேன், வரவரக்கண்டாராய் மனமே ஏங்கியிளையாதிரு" என்று உறுதியாக நல்ல விளைவுகளைக் காண இயலும்.

இப்போது நாம் காணும் வெள்ளி விழாவிலே நம் மக்கள் தவறாது ஒரு சபதம் எடுத்துக்கொள்ளுதல் வேண்டும். "பிறரைக்கண்டு ஏமாறாமல் நம் நாட்டுக்கு, நம் மக்களின் மனப் பண்புக்கு, ஏற்றவாறு நம் முன்னோர் காட்டிய மெய்ந்நெறிக்கு மாறாது உள்ள வழிவகைகளைக்கண்டு உலக நாடுகளில் ஓர் உயர் நாடாக நம் தாய் நாட்டை உயர்த்துவதற்கு இனியும் அயராது உழைப்போம்" என்பதே அது.

கடவுள் பக்தியில்லாத நாட்டில் உண்மை, வீரம், அன்பு, நிலை நில்லாதென நம் காந்தியடிகள் அன்று சொன்ன சொல் வழியே, யார் யார் ஏதேது சிந்தித்திருந்தாலும் அனைத்திலும் மாதேவா உன்செயலே காண்கின்றேனே என்று அவன் திருவடியில் உறுதியான அன்பும் நம்பிக்கையும் கொண்டு, உலகில் ஆன்மிக உயர்நாடாக நாம் வாழ்வோமாக. இப்பழக்கம் நம் சிந்தனைகள் அலைவில்லாது உறுதியுடையனவாக நல்லவை தீயவை இவையெனப் பாகுபாடறிந்துச் செயற்படுத்தும். நாம் அதனால் உயர்வடைவோம். சிந்தனையில் தெளிவும் உறுதியுமுடையவர்கள் நிதானமும், வீரமும், செயலாற்றலும், அறிவு மேன்மையும் உடையவர்களாவார்கள்.

செந்தமிழ்ச் சொக்கன் திருவருளால் இந்த உறுதி நம்மனோர்க்குப் பெருகவேண்டும் என்பது பிரார்த்தனை.

வாழ்க பாரதம், வாழ்க உலகெலாம்.

தருமையாதீனம் ஆவணிமூலப் பெருவிழாவில்



26 ஆவது ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள்
ஸ்ரீ சொக்கநாதப் பெருமான் சந்நிதியில்
அருள்திரு. குன்றக்குடி அடிகளார்க்குப் பொன்னுடை போர்த்துதலும்,
சென்னைப் பல்கலைக்கழகப்பதிவாளர்
திரு. பெ. திருஞானசம்பந்தம்பிள்ளை அவர்களுக்கு
'மும்மொழிக்கொண்டல்' என்ற பட்டமளித்து ஆசீர்வதித்தலும்
(20—8—72,)



# கணபதி என்னும் களிற்றினைத் தொழுவோம்

( புலவர். இரா. செல்வக்கணபதி )

கணபதி என்னும் களிற்றினைப் போற்றின்
கவலைகள் நீங்கும்; காமம் தொலையும்!
விநாயகன் என்னும் வீரனை வணங்கின்
வினைகள் ஒழியும்: வெற்றிகள் விளையும்!
ஐங்கரன் என்னும் ஐயனை நினைக்கின்
அல்லல்கள் தவிரும்! அன்பே மலரும்!
பிள்ளையார் என்னும் பெயரினைத் துதிக்கின்
பெருமைகள் சேரும்; பிணிகள் அகலும்!
ஆனை முகத்தான் அடிமலர் சூடின்
அகத்தில் கவலைகள் அனைத்தும் அழியும்!
ஒருகோட் டப்பனை உளத்தில் போற்றின்
உண்மை ஞானம் ஒளிர்ந்து சிறக்கும்!
இருசெவி வாரணம் இணையடி சூடின்
இருமை இன்பம் எளிதின் கிட்டும்!

மும்மதக் களிற்றின் முன்னர் வணங்கின்
முழும் தடைகள் முனையில் அழியும் !
நால்வாய்ப் பெருமான் நலங்கள் பேசின்
நன்மை எல்லாம் நணுகிச் சிறக்கும் !
ஓம்கா ரத்தின் உருவனைத் தொழுதால்
உலகம் நம்மை உயர்த்திப் போற்றும் !
ஆணவம் நீக்கி அன்புடன் துதிக்கின்
அருந்தமிழ்க் கல்வி ஆல்போல் மேவும் !
சதுர்த்தி நாளில் சம்புவின் மைந்தன்
பூசைகள் புரிவோம் ; புவிமிசை சிறப்போம்.

---

## அட்டைப்பட விளக்கம்

திருக்கோகர்ணம் தேவாரப் பாடல்பெற்ற தலம். இங்கு எழுந்தருளி அருள் வழங்கும் விநாயகரைப்பற்றி வழங்கி வரும் வரலாறு சுவையானது

இராவணன் சிவபெருமானை வழிபட்டு ஆத்மலிங்கம் பெற்றுக்கொண்டு இலங்கைக்கு மீள்கிறான். வழியில் சிறுநீர் கழிக்க வேண்டுவதாயிற்று. அக்காலை அங்கே அந்தணச் சிறுவன் உருக்கொண்டுவந்த விநாயகப் பெருமானிடம் சிவலிங்கத்தைக் கொடுத்துக் கீழே வைக்காது சிறிது நேரம் கையில் வைத்திருக்கச் சொல்லிச் சென்றான். அங்கேயே சிவபெருமான் எழுந்தருள வேண்டுமென்று திருவுளங்கொண்ட விநாயகர் சிவலிங்கத்தைக் கீழே வைத்து விடுகிறார். இராவணன் பெரிது முயன்றும் சிவலிங்கத்தைப் பெயர்த்தெடுக்க முடியாது வருந்திச் சினந்து அந்தணச் சிறுவனாக நின்ற விநாயகர் தலையில் குட்டினான். விநாயகர் பேருருக்கொண்டு இராவணனது பத்துத் தலைகளிலும் குட்ட, இராவணன் விநாயகரை வணங்கி, தன் பிழை பொறுக்க வேண்டித் தம் தலையில் குட்டிக்கொள்ள விநாயகர் அருள்பாலித்தார். அன்று முதலாகத் தம் தலையில் குட்டிக்கொண்டு வழிபடுவார்க்கு ஞானத்தை விநாயகர் இராவணன் வேண்டுகோட்படி அடியார்களுக்கு வழங்கியருளுகிறார் என்பது வரலாறு.

இராவணன் குட்டியதனால் ஏற்பட்ட வடு கோகர்ணத்திலுள்ள இறைவன் தலையில் இன்றும் காணப்படுகிறது.

அந்த விநாயகப் பெருமானை ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் 6—4—1960 இல் தரிசிப்பதையே இவ்விநாயகர் சதுர்த்தித் திருநாளில் அட்டைப்படத்தில் காணுகிறீர்கள்.

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களை



தமிழ்நாடு அரசு தலைமைச் செயலாளர் திருமிகு. P. சபா நாயகம் அவர்கள் குடும்பத்துடன் தரிசித்தல்.